ஓம்
# செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

சிலம்பு உக | திருவள்ளுவர் ஆண்டு கூகஅஉ, புரட்டாசி அக்டோபர், 1951 | பரல் உ

# எழுத்து மாற்றம் திருவைந்தெழுத்தைச் சிதைக்கும்

பண்டைப்புலவர் பெருமக்கள் வெறும் புலவர்களாக மட்டும் விளங்கினரல்லர். மருத்துவம், கணியம், மந்திரம், தவம், ஓவியம், வணிகம், பண்ணியம், படை, தூது, அமைச்சு முதலிய பல்வேறு துறைகளிலும் சொல்லரிய ஆற்றல் பெற்று எல்லையில் புகழுடன் நல்லாரென நாடெல்லாம் பரவத் திகழ்ந்தனர். அவர்கள் நுண்மாண் நுழைபுலச் செம்மலாய் வீற்றிருந்தனர். தம் கூர்த்த மதியால் எழுத்து வடிவங்கள் பொருள் வடிவங்கள் முதலியவற்றைப் பொருந்தும் உவமைகளாக எடுத்தோதி உலகுக்கு ஒப்பில்பெருங் கொடையாக உதவினர். அவர்கள் காட்டிய பொருள்உவமைகள் பல்லாயிர ஆண்டுகளாகியும் ஏதொரு சிறு மாற்றமும் எய்தாமல் அன்றுபோல் இன்றுகாறும் நின்று நிலவுகின்றன. அதுபோலவே எழுத்து வடிவமும் மாறுதலெய்தாமல் நிலவுகின்றது. இஃது எல்லா மக்களுக்கும் எல்லாக் காலத்தும் எவ்வித வேறுபாடுமின்றிச் செவ்விதிற் கொள்ளப்படும் உரிமைமிக்க பொதுமை உயர் செல்வமாகும்.

இம்மாற்றமில் தோற்றத்தாலாம் பயன் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னுள்ள நம் பண்டைய செந்தமிழ்ச்சான்றோரின் சீரிய கருத்துக்களை இன்றும் நாம் எளிதில் புரிந்து இன்புற்று வாழ வழிசெய்யும் வாய்மையாகும். எடுத்துக்காட்டாக 'ஓ' என்னும் தமிழ் எழுத்துப்போல் யானைமுகம் புலனாகின்றது. அதனால் யானைமுகப் பிள்ளையார் 'ஓ' மொழியுருவினர் ஆவர்

என்று தமிழ்நெறி சாற்றுகின்றது. அம்மட்டோ திருக்கோவில் தோறும் அங்ஙனமே திருவுரு அமைத்துத் தீந்தமிழ்ச் செல்வர்கள் வழிவழியாய் வழிபட்டும் வருகின்றனர். அவ்வெழுத்து வரிவடிவில் சிறிது மாற்றமுறுமேனும் அச்சாணி அகன்ற பெருந்தேர்ப்போல் முற்றும் அழிந்து ஒழியும். அதனால் முன்னோர் கருத்தும் பாழ்படும். தீவினைப்பயத்தால் அங்ஙனமாய சீர்கேட்டுநிலை நம் செந்தமிழ்நாட்டுக்கு எய்துமேல்—நாம் நம் பண்டை மூதறிஞர்பால் உய்தியில் குற்றமாம் செய்ந்நன்றி கொன்றவராவோம்,

யாழ்நூல் வல்ல அடிகள் விபுலாநந்தரவர்கள், தம் யாழ்நூலில் பல்வேறுவகையான பண்டைச் செந்தமிழ் யாழ் உருவங்கள் தீட்டியுள்ளார்கள். அவர்களுக்குக் கருத்தில் அவையெல்லாம் தோன்றுதற்குக் கருவியாகத் திருத்தமுற முன்னின்றவை இருபெரும் பாணாற்றுப்படைகளும் பிற சங்கச்சான்றோர் பாடியருளிய பாட்டுரை நூல்களுமேயாம். அந்நூல்களிற் காட்டிய உவமைப்பொருள்களின் துணைகொண்டே யாத்துள்ளார்கள்.

அதுபோலவே மந்திரங்களிற் சிறந்த ஐந்தெழுத்தாம் 'நமசிவய' என்பது நாளும் தொழும் நன்மக்கள் நாட்டத்தில் நன்கு பதியுமாறு நாயன்தன் நல்லுருவாக, கால்முதல் கண்வரை வயிறு, தோள், வாயென வகுத்து ஒப்பிலுரு ஓவியமாகச் செப்பிப் பாடியுள்ளார் நம் முன்னோர். நாட்டில் வழங்கும் சித்தர் பாடல் என்னும் சிறந்த தொகைநூல், வேற்றுக்கலப்பு ஒருசிறிதுமின்றித் தொன்னூள்தொட்டுத் தோற்றமுற்று நிலவும் தனித்தலைமை வாய்ந்த சீரியதொன்றாகும். அந்நூலுள் சிவவாக்கியர் பாடல் என்பது மிகச்சிறந்த முதன்மை பெற்றதாகும். அந்நூல்கள் காலத்தால் மிகவும் பழமைவாய்ந்தன. தமிழ்மக்கள் எல்லோரானும் அமிழ்தெனப் போற்றப்பட்டுவருவன. அதன்கண் எழுத்துக்களைக்கொண்டு வழுவின்றி விழுத்தகு உருவமைக்கும் பாடல்கள் பலவுள. அவற்றையெல்லாம் அந்நூல் நோக்கிக் கண்டு தெளிக. குழிசிச்சொன்றியவிழ்தொத்து ஒன்று ஈண்டு எடுத்துக்காட்டுதும்.

> " நவ்வி ரண்டு காலதாய் நவின்ற மவ்வ யிறதாய்ச்
> சிவ்வி ரண்டு தோளதாய்ச் சிறந்த வவ்வு வாயதாய்
> யவ்வி ரண்டு கண்ணதாய் எழுந்து நின்ற நேர்மையிற்
> செவ்வை யொத்து நின்றதே சிவாய மஞ்செ ழுத்துமே."

—சிவவாக்கியர், ௬௭.

இப்பாடலை அடிபொற்றியே செம்பொருட்டுணிவின் சீரிய தனித்தமிழ் முதல்நூல்கள் பதினான்கனுள் ஒன்றாகிய உண்மை



"நவ்வி ரண்டு காலதாய் நவின்றமவ் வயிறதாய்ச்
சிவ்வி ரண்டு தோளதாய்ச் சிறந்த வவ்வு வாயதாய்
யவ்வி ரண்டு கண்ணதாய் எழுந்து நின்ற நேர்மையிற்
செவ்வை யொத்து நின்றதே சிவாய மஞ்செ ழுத்துமே."

சிவவாக்கியர், ௯௭.

விளக்கத்தின்கண் விளக்கமுறத் திகழும் இரண்டு திருப்பாடல்கள் காண்க.

"எட்டு மிரண்டு முருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள் — சிட்டன்
சிவாயநம என்னும் திருவெழுத்தஞ் சாலே
அவாயமற நின்றாடு வான்."

"ஆடும் படிகேள்நல் அம்பலத்தான் ஐயனே
நாடும் திருவடியி லேநகரம் — கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்."

—உண்மை விளக்கம், ௩௨, ௩௩.

இவைபோன்று எழுத்துவமை உருவமை ஒவியப் பாடல்கள் எண்ணில. காலம்வாய்ப்புழி அவ்வவற்றையும் அவ்வப்போது செவ்வையுற எடுத்துக்காட்டுதும். மேலும் இராவ்சாகிப் சைவப்புலவர், டாக்டர் திரு. இரா. அண்ணாமலைப் பிள்ளையவர்கள் L. C. P. S. L. M. S. S. A. (Lond) M. R. A. S. (குற்றாலம்) நம் செந்தமிழ்ச் செல்வியில் "தமிழ் நெடுங்கணக்கு எழுத்துக்களின் வடிவம் அவை குறிக்கின்ற மந்திரப்பொருள்" இவைகளுக்குத் தக்கபடி இறைவனருள் பெற்ற தனித்தமிழ்ச் சித்தர்களால் அமைக்கப்பட்டுள்ளதென்பதைத் தெளிவாகவும் திட்பநுட்பமாகவும் எழுதி வருகின்றார்கள். அவர்களை இச்செவ்வியில் விரைந்தெழுதி உருவமைப்புடன் ஒப்பில் தமிழகத்துக்குதவித் தப்பாக எழுத்து மாற்றம் வேண்டும் என்னும் எய்யா இடர்ப்பாட்டுக் கொள்கையைப் போக்குவார்கள் என்னும் நம்பிக்கையுடன் பெரிதும் வேண்டுகின்றோம்.

அரசியலாரும் பிறரும் ஆய்ந்தோய்ந்து பாராது ஆன்றோர் பெருமக்கள் முதலாயினாருடன் உசாவுவதும் செய்யாது திடுமென மாற்றம் செய்ய எண்ணும் செய்வினையால் எத்தனை இடர்ப்பாடுகள் நேரக் காண்கின்றோம் என்பதை இனியேனும் உன்னிக் கருத்திருத்தி ஆவன செய்வார்களாக. மொழிக்கு ஒலியே உயிர்; வடிவே உடல். உடலில் ஊறு செய்வது உயிர்க்குச் செய்வதாகும் என்பதையும் உன்னுவார்களாக.

ஓங்கு மொலியுயிரா உற்றவடி வேயுடலாய்ப்
பாங்காய் நிகழுமொழிப் பண்பு.

—இதழாசிரியர்.

---



# வாழியவே!

[நாஞ்சில், கா. கணபதி]

(1) பூமணக்குஞ் சோலையெலாம்
புகழ்மணக்க வீற்றிருந்து
நாமணக்குங் கவிதைகளை
நாகரிகத் தமிழினிலே
வாய்மணத்துப் பாடிடற்கு
வண்டமிழே வாய்த்ததுவாம்
தேமணக்குந் தெளிபொருளே
தமிழ்மொழியே வாழியவே!

(2) நாவணக்கும் பன்மொழிகள்
நாவினிக்கப் படித்தாலும்
பாமணக்க ஒருமொழியாம்
பைந்தமிழே பிறிதில்லை
நீமணக்க உழைப்பதுவே
நேர்மைதரு பிழைப்பதுவாம்
கோமணக்க வீற்றிருந்த
கோற்றமிழே வாழியவே!

(3) நாடகத்துள் இயலிசையில்
நாங்களிக்கச் செய்தமிழே
வீடகத்துள் விண்ணிலவில்
விருந்தூட்டும் செந்தமிழே
கூடகத்துள் உனக்காகக்
குருதியினை ஈந்தேனும்
மாடகத்துள் வைத்திடுவேன்
வண்டமிழே வாழியவே!

(4) பள்ளியினில் பயில்வதனில்
பயனளிக்கும் வியன்தமிழே
விள்ளுவதில் உன்எளிமை
விலங்கினையும் அடக்கிடுமே
உள்ளுவதில் உணர்த்துவதில்
உரைநடைகளாக்குவதில்
கொள்ளைநலம் கொழித்திடுவாய்
கூர்தமிழே வாழியவே!

---

# "கரணம் பிழைக்கின் மரணம்"

[வித்துவான், திரு. ந. சண்முகசுந்தரன், திருவதிகை]

'கரணம் பிழைக்கின் மரணம் பயக்கும்' என்பது நம்நாட்டுப் பழமொழிகளுள் ஒன்று. பழமொழிகள் யாவும் ஆன்றோரால் அனுபவத்தில் கண்டு வழங்கப்பட்டு வருவதேயாகும். அதில் அரிய சிறந்த கருத்துக்கள் உள்ளடங்கியிருக்கின்றன. சில பழமொழிகள் இரு பொருளாகக் காணப்படுகின்றன. மேனோக்கத்தோடு ஒருவகைப் பொருளும், சற்று ஆழ்ந்து நோக்கின் வேறுவகைப் பொருளும் காணப்படுகின்றன. ஆழ்ந்து நோக்குமிடத்துக் காணப்படுவதுதான் உண்மைப்பொருள். இதுபோன்ற இருபொருள் பழமொழிகள் பல உள. அதில் சில வருமாறு:—

"கல்லைக்கண்டால் நாயைக்காணோம் நாயைக்கண்டால் கல்லைக்காணோம்" "களவும் கத்தும் மற"; "ஓதுவாரெல்லாம் உழுவார் தலைக்கடையில்" என்பனவாகும். இவைபோலவே "கரணம் பிழைக்கின் மரணம் பயக்கும்" என்ற பழமொழியுமாகும்.

பழங்கால முதல் இக்காலம் வரை கழைக்கூத்து ஆடுவோர் தமிழகத்தில் காணப்பட்டு வருகின்றனர். ஆடியும் வருகின்றனர். நூல்கள் வாயிலாகப் பழங்காலக் கழைக்கூத்து ஆடுவோரின் சிறப்பியல்கள் காண்கின்றோம். அரசர்களும் ஆதரித்தனர்; புலவர்களும் பாராட்டினர். மக்களும் ஆதரித்து அக்கலையைப் போற்றிக் கண்டு மகிழ்ந்து வந்தனர்.

கழைக்கூத்து ஆடுவோர் ஓர் ஊரின் நடுவின்கண் தங்களின் பறை ஓசையை உண்டாக்குவர். ஓசையைக் கேட்டுப் பலர் ஒன்று கூடுவர். கூத்தர் அதன்கண் ஓர் நீண்ட மூங்கில் கம்பத்தை நடுவர். அக்கம்பம் ஆடாவண்ணம் பல கயிறுகளைக்கொண்டு கட்டுவர். ஆடல் தொடங்குவதற்குமுன் மலர் இறைத்துத் தங்கள் தெய்வத்தை வணங்குவர்.

அதன்பின் மக்கள் காணக் கழையின்மேல் ஏறிப் பல விளையாட்டுக்களைச் செய்வர். சில உயிர்க்கே கெடுதியை விளைவிக்கக் கூடியதாயும் காணப்படும். என்னே! அவர்களின் வயிற்றுப் பிழைப்புக்காகப் படும்பாடு? தன், பால்மணம் மாறாக் கைக் குழந்தையின் வயிற்றில் கயிற்றால் இறுகக் கட்டி, கழையின் உச்சியிலிருந்து கொண்டு விரைவாகச் சுற்றுவார்கள். மக்களைப் பெற்ற மக்கள் அதனைக் கண்ணுறும்போது தம்மை மறந்தே

கண்ணீர் விடாதவர் எவரும் இலர். இரு கழையின் நடுவில் கட்டப்பட்ட கயிற்றில் நடப்பதும்; கழையின் உச்சியில் தலை கீழாக நிற்பதும்; ஒரு கை ஊன்றி நிற்பதும்; ஒரு காலில் நிற்பதும்; சுற்றுவதும்; குட்டிக்கரணம் போடுவதும் போன்ற அருமையான செயல்களைச் செய்வார்கள்.

இவர்களின் சில செயல்களைப் புலவர்கள் உபமானமாக ஆண்டுள்ளார்கள். பொருநர் தெய்வத்தை வணங்கும்போது இறைக்கப்பட்ட மலர்கள் களத்தில் நிறைந்து கிடப்பதை

"ஆடுகளம் கடுக்கும் அகநாட் டையே" என்று உபமானமாக எடுத்தாண்டுள்ளார்.

கழை ஆடா வண்ணம் கயிறுகளைக் கொண்டு கட்டியிருப்பதை,

குராமரத்தில் கறிக்கொடியும் வயலைக்கொடியும் முல்லைக் கொடியும் நான்கு திசையிலும் படர்ந்திருப்பது கூத்தியர் கழையின்கண்ணே கட்டிய கயிறுபோல காணப்படுகிறது என்று சிவஞான முனிவர் கூறுவர்.

கூத்தியர் கயிற்றில் எதிரெதிராக நடப்பதை,

"வரைத்துன்று கறிக்கொடிபோய்க் கடுக்கைமிசை
மரகதத்தோ ரணம்போற் றூவி
நிரைக்கிள்ளை வாரணமு மெதிர்நடப்பப்
பொருநர்நெடுங் கயிறு காட்டும்"

என்று காஞ்சி புராண ஆசிரியர் கூறுவர்.

இருநூறு அல்லது முந்நூறு அடி உயரத்தில் இதுபோன்ற உயிர்க்கு ஆபத்தானவேலைகளைச் செய்யும்போது சிறிதுதப்பினால் அவர்களுக்கு என்ன ஏற்படும் என்பதைக் கூறவேண்டியதில்லை. சாதாரணமாக நாம் சமநிலத்தில் குட்டிக்கரணம் போட்டால் சில வேளைகளில் நரம்புச் சுளுக்கு, இடுப்புப் பிடிப்புப் போன்ற சில துன்பங்கள் ஏற்பட்டு விடுகின்றன. பொருநரோ கழையின் உச்சியில் கரணம் போடுகின்றனர். அக்கரணம் அவர்களுக்குத் தப்பினால் மரணம்தான் பயக்கும். வேறு என்ன பயக்கக் கூடும்! எனவே, இப்பழமொழி பொருநர் செயலுக்கும் பயன் படுகிறது.

இதையே மற்றொரு கருத்திற்கும் பயன்படுத்துவர். கரணம் என்பது காலத்தின் அளவைக் குறிக்கும் பெயராகவும் வருகிறது. திதி, வார, நட்சத்திரம், கரணம், யோகம் என்ற ஐந்து உறுப்புக்களில் ஒன்றாகிய கரணத்தின் கால அளவு சிறிது தப்பினாலுங்கூடச் சோதிடம் பொருந்தவாரா எனக் கூறுகின்றனர்.

செயல்கள் யாவும் செய்ய வேண்டிய காலம் தவறினல் நமக்கு அச்செயல்கள் கைகூடி வாரா. ஆகவே, செயல்கள் யாவும் காலமறிந்து செய்தல் வேண்டும் என்பது. திருக்குறளும்,

"ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி இடத்தாற் செயின்"

என்று உரைக்கின்றது.

இது நிற்க. இப்பழமொழியை உரையிற்சிறந்த நச்சினர்க்கினியர், தமிழர்களின் ஆதிவாழ்க்கை வரலாற்றுப் பகுதியாகிய தொல்காப்பியப் பொருளதிகாரத்து நான்காவது இயலாகிய கற்பியலின் முதற் சூத்திரத்து உரையில் ஆண்டுள்ளார். அதை நோக்குமிடத்து இப்பழமொழி அவர் காலந்தொட்டே தமிழக மக்களிடத்தில் வழங்கி வருகின்றது என அறியலாம்.

கரணம் என்ற சொல்லுக்குப் பொருள் என்னையோ எனின், களவினின்றும் கற்பொழுக்கத்தை ஏற்பதற்குச் செய்யும் சடங்குகள் என்பது.

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபிஞேர் கொடுப்பக் கொள்வதுவே."

என்ற தொல்காப்பியச் சூத்திர உரையில், 'கரணமொடு புணர' என்பதற்கு 'வேள்விச் சடங்கொடே கூட' என்றும், 'கற்பிற்குக் கரணம் ஒருதலையாயிற்று' என்றும் கூறுகின்றார் ஆசிரியர் நச்சினர்க்கினியர்.

பழங்காலத் தமிழர்களின் கரணத்தைப்பற்றி அகநானூற்றில் 86-ஆம் செய்யுளிலும், 136-ம் செய்யுளிலும் விளங்கக் கூறியுள்ளது.

தொல்காப்பியர் காலத்தில் மேலோர் கரணம் கீழோர் கரணம் என இரண்டுவகைப்பட்டிருந்தன என்பது.

"மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்
கீழோர்க் காகிய காலமு முண்டே"

"பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரண மென்ப."

எனவரும் நூற்பாக்களால் அறியலாம்.

ஆகவே, தொல்காப்பியர் காலத்திற்குமுன் (அஃதாவது முதலூழிக் காலமாகிய தலைச்சங்க காலத்தும் முதனூலாசிரியர் காலத்தும்) எல்லாருக்கும் கரணம் ஒன்றாய் நிகழ்ந்தது என்பதும் பின் தொல்காப்பியர்காலத்தில் பொய்யும் வழுவுந்

தோன்றிய காரணத்தால் கரணம் இரண்டு வகையாக மாறிவிட்டது என்பதும் யாம் அறிகின்றோம்.

எனவே, ஓர் தலைவனும் தலைவியும் கற்பொழுக்கமாகிய இல்லறத்தை இனிது நடத்துவதற்கு ஆன்றோர் முன்னிலையில், புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று வாலிழை மகளிர் சூழ, புது மணற் பரப்பிய தண்பெரும் பந்தரில் மங்கல ஒலிகள் ஆர்ப்ப, கொடைக்குரிய மரபினோர் கொடுப்ப, கொள்வதற்குரிய மரபினோர் கொள்ள, வதுவை நன்மணம் கரணமொடு நடப்பது எக்காலத்தும் வழக்கு என்பது உணரலாம். களவில் ஒழுகிய தலைவனும் தலைவியும் களவு வெளிப்பட்டோ வெளிப்படாமலோ இல்லற வொழுக்கம் பூணுகின்ற காலத்துக் கரணமின்றிக் கற்பு நிகழா. ஆகவே, கற்புக்குக் கரணம் ஒருதலையாயிற்று.

களவொழுக்கத்தில் தலைவனுக்கும் தலைவிக்கும் ஏற்படுகின்ற இன்னல்கள் பல. அவ்வின்னல்களை யெல்லாம் இன்பத்தின் வேட்கையால் பொருட்படுத்தாமல் ஒழுகிவருங்காலத்து அம்பலும் அலரும் தோன்றுகின்றன. தோன்றியவுடன் தலைவன் தலைவியை வரைய முற்படுகின்றான். அப்போது உடன்போக்கு முதலியன ஏற்பட்டு வரைதல் நிகழ்கின்றது.

தலைவன் வரையமுற்படுகின்றபோது, தலைவியின் தமர்கள் வரைதலுக்கு இசையவில்லை யென்றால், மடல் ஏறுதல் போன்று பல செய்து உயிர்விடுவன். எனவே, தலைவன் தான் உள்ளன்போடு விரும்பிய தலைவியை அடைய இயலவில்லையென்றால் மரணத்தை ஏற்பான்.

ஆகவே, இப்பழமொழியின் உண்மைக்கருத்து களவொழுக்கத்து உழுவலன்பால் உரிமை கொண்டாடிய காதலரின் கற்பொழுக்கத்திற்கு ஒருதலையாகிய 'கரணம் பிழைக்குமேயானால் மரணம் பயக்கும்' என்பதேயாம்.

---

## மணச்சான்று

ஒருவனும் ஒருத்தியுமாக உடலுயிர்போன்று வாழும் உயிரிய வாழ்க்கைக்கு அடிகோலுவதே மணமாகும். அதற்குச் சான்றாகத் தெய்வம், சான்றோர், உறவினர், ஊரவர், உண்பவை, உதவுபவை முதலிய பலவாம். அவையே மணப்பந்தர்கண்ணமைவ.

மரத்தடியில் நெல்நீர் எரிஒளிமுன் பெண்ஆண்
பரத்திருமுன் ஆற்றும் படிசேர்—வரத்தியல்பாற்
செந்தமிழோர் செய்வர் திருமணமும் சுற்றமெலாம்
வந்துகளி கொள்ள மகிழ்ந்து. —இனியன்.

# கருணாமிர்த சாகரர்

[திரு. ஆ. அ. வரகுணபாண்டியர், தஞ்சை.]

(சிலம்பு உசு, பரல் க, கூ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

இதன்பின் அவ் ஆண்டின் முடிவிலுற்ற "கிறித்துபரன் பிறப்பு விழா—விடுமுறை"க்குத் தம் பெற்றோர் ஆணைப்படி தம் பிறப்பிடம் சென்று தம் தந்தை தாய் தமரைக்கண்டு வணங்கி அவருடன் சிலநாள் உறைந்தார். அக்காலம் இவ ரரும் பெற்றோர், கடந்த சில ஆண்டுகளாய்த் தம் உள்ளத்தே கொண்டிருந்தபடி, திருநெல்லைக்கு ஏழு கல் சேய்மையில் வடக்கிலுள்ள நாஞ்சாங்குளம் என்ற சிற்றூரில் வதிந்துவந்த வேதக்கண் என்ற புனிதரின் அருமகளும், அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, விருந்துபுறந்தரல், பெற்றதைக் கொண் டுவத்தல் முதலிய நற்குணங்கள் வாய்ந்து, எட்டாம் வகுப்புவரை படித்து, ஆசிரியைப் பயிற்சி முடித்தவரும், ஞானவடிவு பொன்னம்மாள் எனப் பெயர்பூண்டவருமான ஒரு பேரழகியைத் தம் மகனாகிய ஆபிரகாமிற்கு 27-12-1882-இல் மங்கலமணம் செய்வித்தனர். எனவே, நம் அண்ணுவியார் மேலுஞ் சிலநாட்கள் தம் வேட்டகத்திலிருந்து, விருந்துண்டு, இன்புற்று மகிழ்ந்துறைந்தார். பின்பு விடுமுறை முடிவுறுமுன்பே தம் பெற்றார், உற்றார், உறவினரிடம் விடைபெற்று, நல்வாழ்த்துரை பெற்றுத் தம் வாழ்க்கைத் துணையுடன் திண்டுக்கல் வந்தடைந்தார்.

ஒரு திங்களளவு இவர் மிக மகிழ்வுடன் தம் பள்ளியில் ஆசான் பணியாற்றினர். ஆனால், சென்னையிலுள்ள அப்பள்ளியின் காரியக் குழுவினர், பொருட்குறைவு காரணமாக மேலும் அப்பள்ளியினை நடத்தவியலாது, அவ்வாண்டின் இறுதியில் அதனைச் சாத்திவிட முடிவு செய்தனர். இதனைக் கேள்வியுற்ற நம் ஆசிரியரும் அவர்தம் நற்றுணையும் உள்ளம் மிக வருந்தினர். எனினும், நம் தேசிகர் தாம் நம்பி வழிபடும் நல்லிறை தம்மைத் தயங்கவிடாது தாங்கி நடத்துவார் என்ற முழு நம்பிக்கையுடன் தம் உள்ளந் திடன்கொண்டு, பொறுமையுடனிருந்தார். அப்பொழுது ஒருநாள் பொன்னிசூழ் தஞ்சையில் வதிந்த இவர் நண்பரான திரு. வி. ஞானமுத்து (B. A.) என்போரால் தீட்டப்பெற்ற ஒரு முடங்கல் அஞ்சல்மூலம் கிடைக்கப் பெற்றார். அதனுள், இவரும் இவர் மனைவியாரும் தஞ்சைக்கு வந்து, அப்போழ்து அருட்டிரு W. H. பிளேக் ஐயரின் கண்காணிப்பிலுள்ள, ஒரு பெண்பள்ளியில் இவர் மனைவியார் தலைமை

ஆசிரியையாகவும், இவர் தமிழ்ப்பண்டிதராகவும் அமர்ந்து பணியாற்றக் கூடுமோவென வரையப் பெற்றிருந்தது. இதனைக் கண்ணுற்ற நம் இள மணமக்கள் மிகக் களிப்புற்று, இச்செயல் தம் தோன்றாத் துணைவரான கர்த்தரின் அருட்செயலே யென்றெண்ணி, அத்தனை நன்றியுற்ற உள்ளத்தினராய் வணங்கி, தஞ்சையிலுள்ள தம் நண்பருக்குத் தாம் தஞ்சை வந்து சேர்வதாகவும் ஒரு கடிதம் வரைந்து அஞ்சலிலிட்டார். திண்டுக்கல்லிலுள்ள தம் அரிய நண்பர்கள் யாவரிடமும் பிரியா விடை பெற்றார். குறித்த நாளிற்கு முன் கூட்டியே புனனூட்டுத் தஞ்சையையடைந்தார். அருட்டிரு W. H. பிளேக் ஐயரை இருவரும் சென்று சந்தித்தனர். அவரும் இவர்களைக் கண்டு மகிழ்ந்து, தம் கண்காணிப்பிற்குட்பட்ட "நேப்பியர் பெருமாட்டி உயர் குடிப் பெண் பள்ளி" (Lady Napier's High Cast Girl's School)யில் இவரை இயற்றமிழ், இசைத்தமிழ், ஓவியம் முதலிய கலைகளைக் கற்பிக்கும் ஆசானாகவும், இவர் மனைவியாரை அதே பள்ளிக்குத் தலைமை ஆசிரியையாகவும் அமர்த்தினர். இவர்களும் மிக்குவகை கொண்டு, 1883ஆம் ஆண்டு, மார்ச்சு, 5ஆம் நாட்காலையில் தம் தம் பணிகளை யேற்றுக் கொண்டனர். இரு கண்ணும் ஒன்றையே நோக்குமாபோல், இவ்விருவரும் தம் கருத்து ஒன்றி அப்பள்ளியின் முன்னேற்றமொன்றையே குறிக்கோளாகக் கொண்டு பணியாற்றி வந்தனர்.

இவர் மெய்வருத்தம் பாராதாற்றிய அருந்தொண்டு காரணமாகவும், கல்விகற்பிக்கும் புதிய முறைகள் காரணமாகவும், தம் மக்கள் கல்வியிற் சுவையுற்று, படிப்பில் ஊக்கமுற்று, அறிவில் மேன்மைபெற்று வளர்வதைக் கண்ணுற்ற பெற்றோர் பலர், அப்பள்ளியின் மேன்மைகளையும், அதன் இரு ஆசிரியரின் திறனையும் பற்றிப் புகழ்மொழி பல விளம்பலானர். அதனைச் செவிமடுத்த பலரும் அப்பள்ளிக்கே தம் மக்களையும் கல்விபயில அனுப்பலுற்றார். இதன் பயனாய் மாணவியரின் தொகை மிகுதலுற்றது. அப்பள்ளியில் இடவசதியும் குறைவுற்றது. நம் பிளேக் ஐயரின் உள்ளமும் மகிழுற்றது. எனவே, 1884-ஆம் ஆண்டில், அருட்டிரு பிளேக் அடிகளார், தஞ்சை, கோட்டை, மானோஜியப்பா வீதி, பட்கோசாமி வட்டாரத்தில் வதிந்துவந்த மன்னம்பட்டர் என வழங்கப்பெற்ற ஐம்புநாத காண்டிகே என்ற ஒரு பெருநிதிக் கிழவர்க்கு உரிமையானதும், அதே சூழலிலுள்ளதுமான ஒரு பெருமனையினைக் குடிக்கூலிக்கமர்த்தி, அதன் பெருங்கீழகத்தினைக் கல்விபயிலிடமாகவும், சிறுமேலகத்தினை நம் ஆசிரியரின் உறைவிடமாகவும் அமைத்து, தாம் இன்புறக் கண்காணித்து வந்தார். நம் இரு ஆசிரியரும் முன்னிலும் அதிக ஊக்கங்கொண்டு தொண்டாற்றி வரலானர்.

அப்போது அருட்டிரு பிளேக் ஐயரின் அருங் கண்காணிப் பிற்குட்பட்ட எட்டுப்பள்ளிகளுள் இப்பள்ளி யொன்றே கோட்டையின் நடுவண் இருந்தமையால், அப் பள்ளியில் பணியாற்றி வந்த நம் ஆபிரகாம் ஆசிரியர்க்குக் "கோட்டை உபாத்தியாயர்" என்றொரு சிறப்புப் பெயரும், இவர் அப் பள்ளியில் தமிழ்ப் பண்டிதராக விருந்தமையாலும், இவர் தமக் கொழிந்த வேளைகளில் நோயுற்றோருக்குப் பண்டுவம் செய்து வந்தமையாலும், 'ஆபிரகாம் பண்டிதர்' என்ற மற்றொரு சிறப்புப் பெயரும் ஏற்பட்டன. மேலுமிவர் இவ்விடம் குடியேறியபின் தம் இசையறிவையும் நன்முறையில் பெருக்கிக்கொள்ளப் பல வழிவகைகள் இருந்தமையின் அவற்றையும் பயன்படுத்திக் கொண்டார். இவற்றிற்குப் போய் எஞ்சிய வேளைகளில், மெய்ப்பொருளறிவனாகிய உயர்திரு. ஐம்புநாத காண்டிகேயிடம் உரையாடியும் வருவார்.

இவரிவ்வாறு தம் மனைவி மக்களுடன் இன்புற்று வாழ்ந்து வருகையில், 1890-ஆம் ஆண்டின் முற்கூற்றில் அருட்டிரு பிளேக் அடிகளார் தம் பிறப்பிடமாகிய மேல்நாடு சென்றாராதலின், திருப்பேதுருக் கல்லூரியில் துணைத்தலைவராகவும், பட்டாங்கு நூற்பாரக (Professor of Philosophy) ராகவு மிருந்த உயர்திரு. ஐசக் தானியேல் என்போரின் கண்காணிப்பிற்குள் இப் பள்ளியும் அமைவுற்றது. இதன்பின் நம் பண்டிதர், ஒருவன் இருதொழிலை மேற்கொண்டு பணியாற்றுவது முறையன்று என்றெண்ணி, ஆழ்ந்தாராய்ந்து, அத்தன் நடத்துதலில் முழுநம்பிக்கைகொண்டு, 1890-ஆம் ஆண்டின் மே—விடுமுறையில் தம் அண்ணாவித் தொண்டினைவிட்டுத் தம் மனைமகாருடன் அவ்விடம் விட்டுக் குடிபெயர்ந்து, தஞ்சை மிஷன் தெருவிலுள்ள ஒரு சிறு மனையைக் குடிக்கூலிக் கமர்த்திக்கொண்டு, அங்கு குடிபுகுந்தார். தவமுனிவர் ஓதியபடி மருந்துகளைச் செய்து எடுத்துக்கொண்டு, பல்லூர்கட்கும் சென்று, நோயுற்றோருக்கு மருத்துவம் செய்து நலப்படுத்தியும், மருந்துகளை விற்றும், ஆங்காங்கே தக்கோர் நட்பினைப் பெற்றும் வந்தார். அக்காலத்தில் இவர்பால் உள்ளன்புடன் உடுக்கை இழந்தான் கைபோல் உதவிய நட்பினர் பலருள், திருப்பாதிரிப்புலியூர், திருக்கோவலூர்-சைவ மடத்தலைவர், அருட்டிரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய ஞானியார் அவர்கள், நாகை, அருட்டிரு ஐசக் ஞானவொளிவு ஐயரவர்கள், அஞ்சல் நிலையத்தலைவர் உயர்திரு. ஊ. சு. கிருஷ்ணசாமி ஐயரவர்கள், சென்னை வழக்கறிஞர் உயர் திரு. ஜோசப் சத்தியநாதன் அவர்கள் (M.A., M.L.), சேலம் நகர்காவல் உண்ணோட்டகரான உயர்திரு. பா. தானியேல்

அவர்கள் ஆகியோர், இங்குக் குறிப்பிடத் தக்கவராவார்கள். பன்முறை வருவாய் குன்றிக் குடும்பச் செலவிற்கு மில்லாது இவர் மிகத் துன்புற்றபோதிலும், அவ்வமயங்களில் தம் உள்ளம் தளர்வுறாது, தாம் கைவிட்டுக்கொண்ட மருத்துவத்தொண்டில் வெகு ஊக்கமுடன் முயன்று வந்தார்.

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்."

என்ற குமரகுருபரர் திருவாக்கிற்கோர் இலக்காய் விளங்கினார். இக்காலத்திலிவர் மனைமகாருற்ற அல்லற்கு மளவில்லை. பெரும் பாலான நாட்களை இவர்கள் ஊண் உறக்கமற்று தம் உள்ளம் கவன்று போக்கினர். எனினும், இவர் தம் புறத்தூய்மை, அகத்தூய்மை, வினைத்தூய்மைகளை மாசின்றிக் காத்து, புன்கணுற்றோருக்கு இன்சொற் கூறி மருத்துவம் செய்து, அவப் பொழுதிலும் தவப்பொழுதாக்கி, நம்பன் இணையடியினை நம்பித் தம் வினையாற்றிப் பெருமான் திருவருட்குப் பொறுமையுடன் காத்திருந்தார்.

இவ்வாறு மூவாண்டுகள் சென்றன. தம்மை நம்பினோரைக் காக்கும் ஈசர் இவரது விடாமுயற்சிக்கும், நன்னம்பிக்கைக்கும் தக்கதாய்த் தம் அருள்மாரியினைப் பெருவாரியாய்ப் பொழியலுற்றார். இவரின் மருந்துகள் இத்தமிழகம் முழுவதும் பரவியதோடன்றி வடநாடுகளிலும், பர்மா, மலேயா, சைகோன், கொழும்பு, மடகாஸ்கர் முதலிய பிறநாடுகளிலும் மிகவாய்ப் பரவி விரிந்தன. இதன்பயனாய் இவர் 1893-ஆம் ஆண்டில் ஒரு நல்மனையை வாங்கினார். இச்சமயம் மைசூர், பூனா, பம்பாய் முதலிய நாடுகளில் மக்களைப் பெருவாரியாய்க் கொள்ளை கொண்டிருந்த கட்டிக்காய்ச்சல் (பிளேக்) என்ற கொடிய நோயைக் கண்டிப்பதற்குத் தக்கதோர் நன்மருந்து எந்நாட்டிலு மில்லாதிருந்தது. இவர் தம் நுண்ணறிவாலும், இறையருளாலும் இதற்கும் ஓர் அருமருந்தைக் கண்டறிந்து, அதை அந்நாடுகட்கு அனுப்பி, நோயுற்றோரை நலப்படுத்தினார். இதனால் இவரின் வருவாய் மிகுந்தது; புகழும் பரவிற்று. இதன் பின் நல்ல தோட்டந்துரவுகளையும், பல கழனிகளையும், பல மனைகளையும் தமக்குச் சொந்தமாய்க் கொண்டார். "செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்," என்ற முதுமொழிக் கேற்பத் தம் உறவினர் பலரையும் தம்பால் வரவழைத்து, அவரவர்க்கேற்ற பணியில் அன்னோரை அமர்த்தித் தம் சுற்றஞ்சூழ இனிதே

வாழ்ந்துவந்தார். திருமலைத்தவமுனி வாழ்த்தியவண்ணம் யாவும் இவர்க்கு நிறைவேறின. இவர் பயந்தமக்கள் நான்கு ஆண்களும், ஏழுபெண்களுமாவார். இவர் அருமனைவியார் 15-12-1911-இல் மறைவுற்றாராகலின், 5-2-1912-இல் தம் குலத்திற்கும், தம் அக வைக்கும், தாம் ஆற்றிவரும் பணிக்கும் தக்கவாறு திருநெல்லை மாவட்டத்திலுள்ள, ஒரு சிற்றூராகிய முதலூரில் வதிந்துவந்த, உயர்திரு. கைலாசம் என்பாரின் அருமகளாரும், பத்தாம் வகுப்புப் படித்துத் தேறி, இசை இலக்கணத்திலும், யாழ் குயிற் றுவதிலும் நற்புலமை வாய்ந்தவருமான திருமதி. பாக்கியம் அம்மையாரை மணந்தார். நம் பண்டிதரவர்கள் தம் அகவை யின் இறுதிவரை மிக்குவகையுடன் இசைத்தமிழிற்கென்றும் தமிழிசைக்கென்றும் ஆற்றிய அரும்பணிகளில், இவ்வம்மை யாரும் தாம் மறைவுறும்வரை பெரும் பங்குகொண்டு தொண் டாற்றி வந்தார்.

நம் பண்டிதரவர்கள் தம் பற்றுட்டுக் கலையாகக்கொண்ட இசைத்தமிழ், வேளாண்மை, கோள்நூல், ஒளிஓவியம் (Photography) பொறிகளை அமைத்து இயக்கல் முதலிய பல கலைகளை யும் மிக நுட்பமாய் ஆராய்ந்து, அவ்வக்கலை அறிஞரும் வியக்கு மாறு அவற்றின் நுட்பங்களைக் கண்டின்புறுவார். இவர் தம் அரும் பற்றுட்டாகிய இசைக்கலையினுக் காற்றின அருந்தொண் டினைமட்டும் ஈண் டொருசிறிதறைகுவோம். பலகலைப் பயிற்சி யையும் தம் பற்றுட்டாகக் கொண்ட இவர், தம் அருமக்களின் அறிவுவளர்ச்சியைப் பெருக்குவதும் தம் கடனெனக் கருதி, அதற்காகப் பணியாற்றுவதையும் தம் பற்றுட்டாகக் கொண் டார். இவர் 1901-ஆம் ஆண்டினிறுதியில் "கருணானந்தர் வைத்தியசாலை இல்லச் சிறுவர் தமிழறியுஞ் சங்கம்" எனப் பெயர்பூண்ட ஒரு சங்கத்தை நிறுவி, அதில் தம் மக்களையும், தம் உற்றூர் உறவினரின் மக்களையும் அங்கத்தினர்களாக்கி, தாம் அதற்குத் தலைமை வகித்து, கட்டுரை வரைதல், சொற்பொழி வாற்றல், இசை பயிலல், நாடகமாடல் முதலிய பல அருநிகழ்ச் சிகளை அதன் அங்கத்தினரைக்கொண்டே தம் முன்னிலையில் நடத்தி இன்புற்றுக் களித்துவந்தார். ஒவ்வொரு ஞாயிறுமாலை யிலும் அவர்கட்குத் தம் மறைகூறும் நன்னெறியினைப்பற்றி ஓதுவார். மிடற்றிசை, யாழிசை, கின்னரிஇசை, மேனாட்டு இசை, வரலாற்று இசை நிகழ்ச்சிகள் (கதாகாலட்சேபம்) முத லியவற்றில் தக்க பல ஆசிரியரைக்கொண்டு அவர்களைப் பயிற்று வித்தும் வந்தார். தம் மக்கள் தாம் அறியாப் பிறமொழிகளில் அமைந்துள்ள இசைப்பாக்களைப் பாடுவதால், அவர்களும் அத னைச் செவிமடுப்போரும், எவ்வகையிலும் உள்ளக் கிளர்ச்சியை

யும், உணர்ச்சியையும், அமைதியையும் எள்ளளவேனும் அடைதற்கியலா திருத்தலைக்கண்ட பண்டிதரவர்கள், மிக உள்ளம் வருந்தினர். பலநாட்கள் உன்னி அதற்கும் தக்கதொரு வழி செய்து களைந்தார். மேற்குறித்த சங்கமக்கட்கு அவரவரின் இசையாசிரியர்கள் கற்பித்த பிறமொழிக் கீர்த்தனங்கள், வர்ணங்கள், சுரகெதிகளானவற்றிற்கு, அரும்பொருள் நிறைந்த தமிழ்ப்பாக்களை இயற்றி அவற்றை அவர்களுக்குக் கற்பித்தும் வைத்தார். இவ்வாறு சற்றேறக்குறைய பதினைந்து வர்ணங்கள், இருபத்தைந்து சுரகெதிகள், இருநூறுக்கும் மேற்பட்ட கீர்த்தனைகள் ஆகியவற்றிற்குத் தமிழ்ப்பாக்களை அமைத்து, அவற்றுள் ஒருநூறு பாடல்களைப் பாலை, கேள்வி, பாணி (சுருதி, சுரம், லயம்) என்பனவற்றின் குறிப்புகளுடன் "கருணாமிர்த சாகரத் திரட்டு" என்ற இசைப்பாநூலை 1907-ஆம் ஆண்டில் அச்சிட்டு வெளியிட்டார். தமிழிசையைப் புதுப்பித்தற்கு அடிகோலியதில் முதல்வரான இவர், இதன்பிறகும் உள்ள நிறைவு கொண்டாரில்லை.

ஒருவர் இயற்றிய இசைப் பாக்களிலுள்ள "பண்ணுளத்தியாகிய வர்ணமெட்டு"களில், வேறொருவர் தமிழ்மொழிப் பாக்களை அமைத்துத் தாம் பாடுவது "இரவல் சீலையை உடுத்திக்கொண்டு கலியாணப் பந்தலில் மினுக்குதலை ஒக்கு"மென எண்ணினர். ஆகலின் பல பண்களில் (இராகங்களில்) பல பண்ணுளத்திகளை இயற்றிக்கொள்ளும் விதிமுறைகளையும் ஆராய்ந்தறியப் புகுந்தார். புகவே ஒரு தானநிலையிலுள்ள (ஸ்தாயியிலுள்ள) பாலைகளின் (சுருதிகளின்) அலகுகள் வடமொழி நூற்கள் கூறுவதுபோல் இருபத்திரண்டாக விராது, இருபத்துநான்காக விருத்தல் கண்டு, அந்நுண்பொருளை நம் சிலப்பதிகாரத்தின் துணைகொண்டு மேலும் துருவி ஆராய்ந்து, ஒரு தானநிலையிலுள்ள பாலைகளின் அலகுகள் 24, 48, 96 என அமைந்திருத்தலைக் கண்டு மிக மகிழ்வுற்று, இஃதொன்றினையே பொருளாகக்கொண்ட "கருணாமிர்தசாகரம்" என்றோர் அரும் பெருநூலை 1917-ஆம் ஆண்டில் அச்சிட்டு வெளியிட்டார். ஆயிரத்து இருநூற்றெட்டுப் பக்கங்கள் கொண்ட இந்நூல் கருணாமிர்தசாகரத்திற்கு முதற்பகுதியாயிற்று. மேலும், சிலப்பதிகாரத்தினுள் இலைமறை காய்போல் மறைவுற்றிருந்த, பண்ணுளத்திகளை இயற்றுவதற்குரிய ஐவகைவிதிகளையுங் கண்டு மிக இன்புற்றார். இவ் ஐவகைவிதிகளைத் தம் மனைவி மக்கட்கும் உணர்த்தித், தம் மனைவி திருமதி பாக்கியம் அம்மையாரைக்கொண்டு பண்ணுளத்திக்குரிய விதிமுறைகளை உணர்த்தும் "கருணாமிர்தசாகரம்" இரண்டாம் பாகத்தை

எழுதுவித்தும், இதன் பயனைப் பிறக்கும் புதுப்புதுப் பண்ணு ளத்திகளைத் தம் மக்கள் திருமதி D. மரகதவல்லி அம்மாள், திருமதி N. கனகவல்லி அம்மாள் ஆகியவர்களைக் கொண்டு இயற்றிப் பாடக் கேட்டும் தாம் இன்புற்றார்.

இந்தியா எனப்படும் நம் நாவலந் தேயத்தில் இசைத்தமி ழின் வளர்ச்சிக்கும், பாதுகாப்பிற்குமென "இசை மாநாடு" (Music Conference) களைக் கூட்டுவித்து நடத்தியவருள் நம் பண்டிதரவர்களே முதல்வராவர். 1912-ஆம் ஆண்டு, மேத் திங் கள், 27-ஆம் நாளில், இந்நாட்டின் பல பாகங்களிலுமிருந்து இசைப்புலவர், இசையறிஞர், இசையன்பர், இசைப்புரவலர், இயற்றமிழ்ப்புலவர் ஆகிய பல அறிஞர்களையும் வரவழைத்து ஒன்றுகூட்டி, இசையின் பல அரும் பொருள்களைப் பற்றி மூன்றுநாட்கள் ஆராய்ச்சி நிகழ்த்தி, அவ்விசை மாநாட்டினைப் பிறர் உதவியின்றித் தம் பொருளைக்கொண்டே நடத்தி இன்புற் றார். இவ்வாறே மேலும் ஐந்து இசைமாநாடுகளைத் தம் பொருளைக்கொண்டு 1915-ஆம் ஆண்டிற்குள் நடத்தி மகிழ்ந் தார். இதன்பின் வடநாட்டிலுள்ள பரோடா அரசரான H. H. கெய்க்குவார் மன்னரால், 1916-ஆம் ஆண்டு, மார்ச்சுத் திங்கள், 20-ஆம் நாளில், பரோடாவில் நடைபெற்ற முதல் "அகில இந்திய இசை மாநாட்டிற்"கு இவர் அழைக்கப்பெற் றார். நம் பண்டிதரவர்கள் அவ்வழைப்பிற்கிணங்கித் தம் மனைவி மக்களுடனும், மற்றும் பல தமிழ்நாட்டு இசைப்புலவர்களுட னும் ஆங்குச் சென்று, இவ் விரிநிலத்தின் கண் இன்னிசைக்கலைக் குத் தாயகமாய்த் தொன்றுதொட்டு விளங்கும் நாடு தென்றமிழ் நாடே என்றும், நம் இசைக்கின்றியமையாத மூலப்பொருளான பாலையின் அலகுகள் நம் இசையியல் மரபின்படியும் பண்டைத் தமிழ் நூல்களின்படியும், இருபத்துநான்கே என்றும் பல தமிழ் நூற்களைக்கொண்டு சான்றுகாட்டி உரம்பெறக் கூறியும், தம் மக்களின் துணைகொண்டு மிடற்றாலும் யாழ்க்கருவியாலும் இசைத்துக்காட்டியும், கணிதமுறைப்படி விளக்கிக் காண்பித் தும் ஐயந்திரிபற அறிவுறுத்தினார். இதன்பின் இவர் தஞ் சைக்கு வந்து ஏழாம் இசைத்தமிழ் மாநாட்டினை 19-8-1916-இல் நடத்தினார். இவ்வாறாய் நம் இசைத்தமிழிற்கெனப் பல வகைகளிலும் அரும்பணியாற்றிய நம் இசைஞானியார், இம் மாநிலம் வருந்த 31-8-1919-இல் தம் பூதவுடலை நீத்தார்.

இவரது பொன்றாப் புகழ் என்றும் நின்று நிலவுவதாக.

———

# மழலையும் அமிழ்தும்

[திரு. கே. நாராயணன்]

பண்டைத் தமிழர், கடைச்சங்ககால நூல்கள் பலவற்றின் திறங்களை ஆராய்ந்தறிந்து, அவற்றுள் சிலவற்றை மேல்கணக்கு எனவும், சிலவற்றைக் கீழ்க்கணக்கு எனவும் தொகுத்து வைத்துள்ளனர். ஒவ்வொன்றிலும் பதினெட்டு நூல்கள் உள்ளன. அவற்றுள் கீழ்க்கணக்கு நூல்களுக்கு,

> "அடிநிமிர்பு இல்லாச் செய்யுள் தொகுதி
> அறம்பொருள் இன்பம் அடுக்கி அவ்வகைத்
> திறம்பட வருவது கீழ்க்கணக் காகும்"

எனப் பன்னிரு பாட்டியலில் விதியும் வகுக்கப்பட்டுளது. இதனையே தொல்காப்பியர்,

> "வனப்பியல் தானே வகுக்கும் காலை
> சின்மென் மொழியால் தாய பனுவலோடு
> அம்மை தானே அடிநிமிர் பின்றே"

என்னும் செய்யுளியல் 236-ஆம் சூத்திரத்தான் தாயபனுவல் என அவற்றின் தன்மை நோக்கி அப்பெயரிட்டு வழங்குவர். இங்ஙனம் அமைந்துள்ள கீழ்க்கணக்கு நூல்களுள் "இனியவை நாற்பது" என்பதொன்று. இதனை இயற்றியவர் மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேந்தனார் என்பவர். இந்நூலாசிரியர் இயற்பெயர் சேந்தனார் என்பது. இவர் பூதன் என்னும் தமிழாசிரியன் மகனார் போலும். இவர் திருவள்ளுவருக்கும் பிற்காலத்தவர் என்பது அவர் நூலான் போதருகின்றது. அது பின் உரைக்கப்படும். இனி ஈண்டு இப் பூதஞ்சேந்தனார் பாடியுள்ள,

> "குழவி தளர்நடை காண்டல் இனிதே
> அவர்மழலை கேட்டல் அமிழ்தின் இனிதே"

என வரும் வெண்பாப் பகுதியிற் கூறப்பட்ட உவமத்திறனே ஈண்டு ஆராய எடுத்துக்கொள்ளப்பட்டது.

மேற்கூறிய செய்யுளின் முதலடியில், குறுகுறு நடந்து, சிறு கை நீட்டித் தள்ளாடித் தள்ளாடி நடந்துவரும் தங்கள் குழந்தைகளின் நடையைக் காண்டல், பெற்றோர்க்கு இனிது என்றார். அடுத்த அடியில் அவருடைய மெய்பெறு மழலைச் சொற்களைக் கேட்டல் அமிழ்தத்தினைவிட இனிது என்று கூறுகின்றார்.

தொல்காப்பியர்,

"உவமமும் பொருளும் ஒத்தல் வேண்டும்"

என விதித்துள்ளார். ஈண்டு இப்பாட்டில், மழலை செவியால் நுகரப்படுவதோர் பொருள். அமிழ்தோ நாவினால் நுகரப்படுவதோர் பொருள். செவியால் நுகரப்படும் சுவைக்கு வேறொரு செவியால் நுகரப்படும் உயர்ந்த பொருளை உவமம் கூறுதல் பொருந்துமேயன்றி, நாவினால் நுகரப்படும் அமிழ்தத்தினை உவமம் கூறுதல் பொருந்தாது.

இனிச் சுவைப் பொதுமை ஒன்று பற்றி, மழலைச் சொற்களுக்கு அமிழ்தத்தை உவமமாகக் கூறினார்; நுகரப்படும் பொறி வேறுபாடு கருதி உவமம் கூறினாரல்லர் எனின், அற்றன்று. மழலை செவியான் நுகரப்படுவது. அமிழ்து நாவான் நுகரப்படுவது. இதனையறிந்த வள்ளுவனார்,

"குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்"

என்றார். இதனுள் செவியான் நுகரப்படும் மழலைச்சொல்லுக்குச் செவியான் நுகரப்படும் குழல், யாழ் முதலியவற்றின் இசையைக் கூறியமை காண்க.

அன்றியும், அவர் மழலையைக் கேட்டலாகிய தொழில் வேறு யாதேனும் ஒன்றனது கேட்டலாகிய தொழிலைவிட இனிதாக இருக்கமுடியுமேயன்றிக், கேட்டலாகிய தொழில் அமிழ்து என்னும் பெயரைவிட இனியதாக இருக்கமுடியாது என்பது உவமம் கற்றார்க்கு வெளிப்படை.

இக்கருத்துப் பற்றியன்றே பரிமேலழகியார்,

"அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல்"

என்னும் குறளில், கொளல் என்னும் தொழிற்பெயர் அமிழ்து என்னும் பொருளுவமையோடு இயையாது என்று கூறிப் பிறருரையை மறுத்தனர். எனவே, "கோட்டிகொளல் அமிழ்தற்று" என்பது எவ்வாறு பிழையெனப்பட்டதோ அவ்வாறே "மழலை கேட்டல் அமிழ்தின் இனிது" என்பதும் பிழையெனப்படும்.

அன்றியும் பூதஞ்சேந்தனார், திருவள்ளுவர், "குழலினிது யாழினிது என்பதும் மக்கள் மழலைச்சொல் கேளாதவர்" என்று அருளியதை நன்கு பயின்றவராதலின், அவ்வாறே தாம் மழலை கேட்டலுக்குக் குழல், யாழ் இவற்றின் இசை கேட்டலைக் கூறுவரேயன்றிப் பொருத்தமில்லா அமிழ்தினைக் கூறார்.

அவ்வாறன்றி அமிழ்து என்னும் உவமம் கூறப்படல் வேண்டும் எனின், அதற்கேற்ற பொருள், அவர் மழலை கேட்டலாக இராமல், அவர்தம் சிறுகை அளாவிய கூழாக இருத்தல் வேண்டும். இதைத்தான் வள்ளுவனார்,

"அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்"

என உவமம் பொருந்துமாறு பாடியுள்ளார்.

அற்றேல் பூதஞ்சேந்தனார் திருவள்ளுவனார்க்குப் பிற்பட்டவரோ எனின், ஆம்; பிற்பட்டவரே. திருவள்ளுவனார்,

"நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கொளல்"

என்று பாடியதைப் பூதஞ்சேந்தனார், "நட்டார்க்கு நல்ல செயலினிது எத்துணையும், ஒட்டாரை ஒட்டிக்கொளல் அதனின் முன்னினிதே" என்று பாடியுள்ளார். திருவள்ளுவனார்,

"ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றம் கொளக்கிடந்த தில்"

என்று பாடியதை பூதஞ்சேந்தனார், "ஒற்றினான் ஒற்றிப் பொருள் தெரிதல் முன்னினிதே" என்று பாடியுள்ளார். இவ்வாறே பல காணப்படும்.

இனிச் சங்ககாலத்துச் சான்றோருள் ஒருவராகிய பூதஞ்சேந்தனார் இங்ஙனம் உவமப் பொருத்தம்கூட இல்லாமல் நூல் செய்திடுவாரோ எனின், செய்யார். அது மெய்ப்பித்தற் பொருட்டன்றே இக்கட்டுரை எழுந்தது.

பண்டைக்காலம் தொட்டே நம் தமிழ்மொழியில் ஏட்டுச் சுவடிகளைப் பார்த்துப் படி எடுப்பவர்களும், ஒருசிறிது கற்றவர்களும் அறிந்தும், அறியாமலும், செய்த பிழைகள் பலவற்றுள் இவ்விடமும் ஒன்று.

எனவே, "குழவியின் தளர்நடையைக் காண்டல் இனிது; அதைவிட அவர் மழலைச்சொல் கேட்டல் இனிது," என்னும் கருத்தமைந்த இவ்வினியவை நாற்பதிலுள்ள பாட்டு,

"குழவி தளர்நடை காண்டல் இனிதே
அவர்மழலை கேட்டல் அதனின் இனிதே"

என்பது முதலாக அமைந்திருக்கவேண்டும். இதனைத் தமிழுலகம் ஆராய்ந்து ஏற்றுக்கொள்வதாகுக.

---

# "நீலகேசி"

[வித்துவான். திரு. வே. சிவசுப்பிரமணியன், மயிலம்]

செந்தமிழ்நாட்டில் காலங்கள் தோறும் பல்வகைச் சமயங்கள் தோன்றி வளர்ந்துள. அங்ஙனம் வளர்ந்த பல்வகைச் சமயங்களும் ஒன்றையொன்று பற்றியே நிற்பன. சைவம், வைணவம், சமணம், பௌத்தம் என்ற இந்நான்கு சமயங்களும் தம்முட் பல வேறுபாடுடையவேனும் கருத்து, அன்பு, கொல்லாமை ஆகிய அடிப்படையில் அமைந்தனவேயாம். இவற்றுட் சமணசமயம் சங்ககாலத்தை யண்மிய காலத்தில் தமிழ்நாட்டிற் புகுந்தது. சமணர் செய்யுள்நூல்களைத் தமிழர் பெரிதும் விரும்புவது கண்டு செந்தமிழ்மொழியிற் செவ்விய நூல்பல புனைந்து அதன் வழியில் தமது சமயக்கருத்துக்களை வெளியிடுவாராயினர். அம்முறையில் தோற்றம் பெற்ற நூல்கள் சீவக சிந்தாமணி, பெருங்கதை, வளையாபதி, நீலகேசி முதலியனவாம்.

நீலகேசி நூலாசிரியர் பெயர் அறியக்கூடவில்லை. இஃது ஒரு திரட்டுநூல் என்று தெரிகிறது. இதைத் திரட்டித் தொகுத்தவரும் இதற்கு விருத்தியுரை வரைந்தோரும் 'சமய திவாகரவாமன முனிவர்' என்பார். இந்நூலின் துணைகொண்டு நாம் அறியும் வரலாறு :

பாஞ்சால நாட்டிற் சமுத்திரசாரன் என்னும் அரசனால் ஆளப்படும் புண்டவர்த்தனம் என்னும் நகரத்தின்கண் உள்ள பலாலையம் என்னும் இடுகாட்டில் சிறுபேய்கள் பலவற்றிற்குத் தலைவியாகிய பிடாரியம்மன் கோயிலில் முனிச்சந்திரன் என்னும் பெயருடைய முனிவன் நான்கு மாதவளவு அருகதேவன் அடியிணையறாத ஒடுங்கிய சிந்தையனாய்த் தவத்தொடு உறைந்தனன். ஒருநாள் நகரமாந்தர் சிலர் குழுமி பிடாரியம்மனுக்கு மறிப்பலியிடுவதற்கு வேண்டிய சிறப்புக்களைச் செய்தனர். அதுகண்ட முனிவன் அவர்களை இப்பலி எதற்கென வினவினன். அவர்கள் 'இந்நின்றபெண் குழந்தைபெறுமையால் பிடாரியை வேண்டினோம். அவள் மறிப் பலி வேண்டினள். அவளை உவப்பித்தற்காகவும் பட்டத்துக்குரிய குழந்தையைப் பெறல் நிமித்தமாகவும் இப்பலியிடத் துணிந்தோம்,' என்றனர். முனிச்சந்திரன் அவர்கட்குக் கொலையினால் வரும் கேடும் கொல்லாமையால் வரும் நன்மையும் ஆகிய இவற்றை விளங்க விரித்துரைத்துக் கொலையொழியச் செய்தனன். இம்முனிவன் அக்காட்டகத் துறைவாளின் தங்கட்கு நாடோறும் கிடைக்கும் உயிர்ப்பலி கிடையா

தொழியும் என்றறிந்த பேய்கள் அவனை எங்ஙனமேனும் காட்டைவிட்டுத் துரத்திவிட எண்ணின. அங்நிலையில் தம் முயற்சியால் அம்முனிவனை வேறல் இயலாதென எண்ணி வெலற்குரிய தெய்வம் ஒன்றினைத் தேடிப் பிடித்துக்கொண்டு வருதல் கருதி காசிநாடு, சேடியநாடு ஆகிய பல நாடுகளிலும் திரிந்தும் கிடையாது வருந்த அப்பேய்களைத் தென்றிசை நாட்டைச் சேர்ந்த நீலகேசி யென்னும் தெய்வம் எதிர்ப்பட்டது. பேய்கள் நீலகேசிபால் தம் குறை உரைத்தன. அப்பேய் மகளும் முனிவனை வென்று போக்குவோம் எனக்கூறிப் புண்டவர்த்தனப் புறங்காட்டைச் சேர்ந்தாள். பல்லாற்றானும் துயர் உறுத்தினும் முனிவன் துன்புறாமையானும், அவன் தவத்தீ தன்னைச் சுடுதலானும் நீலகேசி அவனை வேறல் இயலாதென நினைத்து அழகிய மங்கையின் வடிவு எடுத்து அவனை மயக்குவதாகத் தன் மனத்துக் கருதி அவ்வாறே செய்தனள். முனிவனும் இது பெண்ணல்ல; பேய்த்தெய்வம் எனத் தன் மனத்துத் தெளிந்து அதனாற் செய்யப்படும் மாயங்கள் பலவற்றையும் அகற்றித் தூயனாய் நின்று அறங்கூறினன். அவனுடைய அறவுரைகளால் மனந்திருந்திய நீலகேசி பிறப்பின் கொடுமை, கொல்லாமையால் வரும் நன்மை ஆகிய பலவற்றையும் அறிந்தகத்தடங்கி அவ்வறத்தைக் கைக்கொண்டனள். கைக்கொண்டதோடன்றி அச்சமண தருமத்துக்கு மாறானவர்களையும் எதிர்த்து வாதிடக் கிளம்பி, முறையே குண்டலகேசி, அருக்கசந்திரன், மொக்கலன், புத்தன் ஆகிய புத்தமத வாதிகளையும், ஆசீவகம், சாங்கியம், வைசேடிகம் முதலிய மதவாதிகளையும், வேதவாதிகளையும், பூதவாதிகளையும் வென்று ஒப்பாரும் மிக்காரும் இன்றிப் புகழ் பெற விளங்கினள் என்பது.

நீலகேசி கபிலபுரம் சென்று புத்தரோடு வாதம் செய்தாள். எனவே இந்நீலகேசியின் காலம் கி. மு. மூன்றும் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகிறது. இவள் யார் என அறிதற்குரிய சில குறிப்புக்கள் தமிழ்நூற்களில் சிதறிக் காணப்படுகின்றன. அவற்றை ஈண்டுத் தொகுப்பாம்.

உமாபதி சிவாசாரியார் அவர்கள் சேக்கிழார் புராணத்தில் சேக்கிழார் பிறந்த வேளாளர் குலத்தின் பெருமையைப் பற்றிப் பேசவந்த விடத்து நீலி என்னும் பேய்மகள் சரிதம் ஒன்றினைக் கூறியுள்ளார். அச்சரிதமாவது :—

பரத்தை பாற்பட்டொழுகிய வணிகன் தன்னைத் திருத்த முயன்ற தன் மனைவியைத் தனிவழிப்படும்போது கொன்றுவிட, அப்பழி, நீலி என்னும் பேயாகி அவனை அலைத்து வந்தது. அதனினின்றும் தப்புதற் பொருட்டு ஒரு பெரியார் தந்த மந்திர

வாளினை விடாமற் கையகத்துக் கொண்டிருந்தான் வணிகன். அந்நீலியும் அவனைக் கொல்வதற்குச் சமயம் நோக்கியிருந்தனள். அவன் ஒரு நாள் பழையனூர் எய்தி ஆண்டுள்ள எழுபது வேளாளர்கள் நிறைந்த அவையில் நீலி தன்னைக் கொல்ல வருகின்றமையால் காத்தல் வேண்டும் என்று அடைக்கலம் புகுந்தனன். நீலி கள்ளிக் கொம்பொன்றினைக் குழந்தையாக்கி இடையில் வைத்துக்கொண்டு தானும் அழகிய பெண் வடிவம் பூண்டு அவன் பின் எய்தி, அவையோரைப் பார்த்து, "இவன் என் கணவன்; இது எங்கள் குழந்தை; இவன் பரத்தைபாற்பட்டு எங்களை வெறுத்து ஓடி வந்து விட்டனன். எங்கள் இருவரையும் ஒன்றுபடுத்தி வாழவைக்க வேண்டும்," என்றனள். வணிகன் 'இது பெண்ணல்ல பேய்,' என்றனன். நீலியும் தன் இடையில் உள்ள குழந்தையை 'உன் தந்தையிடம் போ,' என்று விட்டனள். அக்கள்ளக் குழந்தையும் 'அப்பா' என்றழைத்து வணிகன்பாற் சென்றது. இம்மாயத்தால் மயங்கிய வேளாளர்கள் வாளினை நீக்கிவிட்டு வணிகனை அவளுடன் தங்கும்படி ஏவினர். அதனோடன்றி அதனால் அவன் உயிர்க்கு ஏதம் வருமாயின் தங்கள் எழுபது பேர் உயிரையும் அதற்கு ஈடாகத் தருவதாய் உறுதி உரைத்தனர். அன்றிரவு நீலி வணிகனைக் கொன்று பழி தீர்த்துக் கொண்டது. இதனையறிந்த வேளாளர்கள் எழுபதின்மரும் தாங்கள் வணிகனுக்குச் சொல்லிய சொல்லே தம்முயிரினும் சிறந்தது என்றெண்ணித் தீக்குளித்து உயிர் விட்டனர் என்பது. இதனை அறிவிக்கும் அப்பாடல்,

> "மாறுகொடு பழையனூர் நீலி செய்த
> வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத் தாங்கள்
> கூறியசொற் பிழையாது துணிந்து செந்தீக்
> குழியிலெழு பதுபேரு முழுகிக் கங்கை
> ஆறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்ப
> ரண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப்
> பேறுபெறும் வேளாளர் பெருமை யெம்மாற்
> பிரித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ"

என்பதாம்.

பழையனூர் என்பது தொண்டை நாட்டில் காரைக்காலம்மையார்க்குக் காட்சிகொடுத்த இடமாகிய திருவாலங்காட்டைச் சார்ந்ததாகும். பழையனூர் நீலி அவ்வணிகன் வேறு எவ்விடத்தில் எப்பிறவியில் உள்ளான் என்பதனை அறிதற்காகப் பல்வேறு இடங்களிலும் சுற்றித் திரிந்து கொண்டிருத்தல் வேண்டும். அப்பொழுது புண்டவர்த்தனப் புறங்காட்டைச் சார்ந்த பேய்களை எதிர்ப்பட்டிருத்தல் கூடுமன்றோ. நீலகேசி நூலாசிரியரும்,

"காசி நாட்டினும் சேடிய நாட்டினும் காணு
தேசம் தாம்பல் திரியவத் தென்றிசை நீல
கேசி மாதெய்வம் தலைப்பட்டுக் கிளர்ந்தின்ன வுரைக்கும்"
(44. தருமவுரைச் சருக்கம்)

என்று கூறினர். "தென்றிசை நீலகேசி" என்று பொதுவாகக் கூறியிருப்பதால் அந்நீலி பழையனூர் நீலி யென்பதற்குரிய ஆதாரங்களை இனிப் பார்ப்போம்.

பழையனூர் வேளாளர்கள் எழுபது பேரும் தீக்குளித்துத் திருவாலங்காட்டப்பர் திருவடி யடைந்ததும் அப் பழையனூரார் தம்மூரினர்க்குக் கொடும்பழி செய்த நீலியை அவ்வூரினுள் இருக்க வொட்டுவரோ? அதனுல் நீலி ஆண்டு நின்று வெளிக்கிளம்பிச் சுற்றித் திரிவதாயிற்று. நூலாசிரியரும் பொதுவாகத் "தென்றிசை நீலகேசி" என்றூர்.

விருத்தியுரை எழுதிய சமயதிவாகர வாமனமுனிவர் "தென்றிசை நீலகேசி — பழையனூர் நீலகேசி" என்றே குறிப்பெழுதியுள்ளார். நூலாசிரியர்காலம் இன்னதென அறியக்கூடவில்லை யெனினும் குண்டலகேசி நூற்கருத்துக்களைப் பெரிதும் மறுப்பதையே தன் போக்காகக்கொண்டு எழுந்த நூலாகத் தெரிதலின், குண்டலகேசிக்குப் பிற்பட்டதாகவே தெரிகிறது. சிலப்பதிகாரமும், மணிமேகலையும் போல் ஒன்றையொன்று அடியொற்றி எழுந்த நூலாதலின் ஒரே காலத்ததாகக் கொள்ளினும் இழுக்கில்லை. எவ்வாருயினும் அக்காலம் சங்ககாலத்துக்குப் பிற்பட்டதாகவும், பல்லவர் ஆட்சி தமிழ் நாட்டிடையே தோன்றுவதற்கு முற்பட்டதாகவும் ஆகும். எனவே அப் பழங்காலத்துப் பழையனூர் நீலியைப்பற்றி நூலாசிரியராற் கேட்கப்படாது போயினமையின் நூலாசிரியர் விளங்கக் கூருது சென்றது தவறு எனல் இயலாது. இந்நூலுக்கு 'நீலகேசித் திரட்டு' என்று வேருெரு பெயர் இருத்தலை நோக்கின் இது முன்னுல் ஒருவரால் செய்யப்பட்டு பின்னுல் வாமன முனிவரால் திரட்டப்பட்டதாகத் தெரிதலின், நீலகேசியின் முன் வரலாறுணர்த்தும் பாடல்கள் சிதைந்து போயிருத்தலும் கூடுமன்றே.

உரையாசிரியர் காலத்துப் பழையனூர் நீலியின் வரலாறு பெருவழக்காக அறியப்பட்டது யாங்கனமென ஆராய்வோம். உரையாசிரியர் ஆகிய வாமன முனிவர் நீலகேசி "பெரும்பாவமறத்துய்த்து" என்னும் 313-ம் செய்யுளுரையில்

"மருவிய வினைகள் மாற்ரு மாசினைக் கழுவிவீட்டைத்
தருதலாற் புனிதனுக்குந் தன்மையாற் புண்ணியமாமே
என்பதெம் மோத்தாகலின் என்பது"

என மேருமந்திரபுராணச் செய்யுள் 95-ஐக் குறிப்பிடுவதால் மேருமந்திர நூலாசிரியர் இவர் என்பது பெறப்படும். மேருமந்திரபுராணப் பதிப்பாசிரியர் திரு. அ. சக்கரவர்த்தி அவர்கள் கல்வெட்டுத் துணைகொண்டு வாமனமுனிவர் காலம் 1382 கி. பி. 1387-88 கி. பி. ஆக இருக்கவேண்டும் என உறுதிப்படுத்தியுள்ளார். எவ்வாறாயினும் அது 14-ம் நூற்றாண்டாகிறது. இந்நூற்றாண்டினை அண்மிய சில நூற்றாண்டுகளில் இப் பழையனூர் நீலிச்சரிதை நூலாசிரியர்களால் நன்கறியப்பட்டுள்ளது.

கி. பி. 640ம் ஆண்டிற் பட்டம் எய்திய கூன்பாண்டியன் எனப்படும் நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாற பாண்டியன் காலத்தவரான திருஞானசம்பந்தர் தொண்டைநாட்டைச் சேர்ந்த பழையனூர்த் திருவாலங்காட்டுத் தேவாரத்தில்,

" துஞ்ச வருவாரும் தொழுவிப்பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும் முனைநட்பாய்
வஞ்சப் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்
டஞ்சும் பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே "

என இப்பேய்மகள் சரிதையைக் குறிப்பிட்டுள்ளார்.

கி. பி. 1133-1150ல் அரசாண்ட இரண்டாம் குலோத்துங்க சோழன் அரசவையில் முதல் அமைச்சராய் இருந்து கி. பி. 1146-1173ல் அரசாண்ட இரண்டாம் இராசராசன் காலத்து சிவனடியாராய்ப் பெரியபுராணம் பாடிய சேக்கிழார் தமது நூலின் இரண்டிடங்களில் இச்சரிதையைக் குறிப்பிட்டுள்ளார்.

திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணத்தில் மூன்றும் பாட்டில்,

" நற்றி றம்புரி பழையனூர்ச் சிறுத்தொண்டர் நவைவந்
துற்ற போதுதம் முயிரையும் வணிகனுக் கொருகாற்
சொற்ற மெய்ம்மையும் தூக்கியச் சொல்லையே காக்கப்
பெற்ற மேன்மையின் நிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு "

என்றும், திருஞானசம்பந்தசுவாமிகள் புராணத்தில் 106-ம் செய்யுளில்,

" துஞ்சவரு வார்என் றெடுத்த வோசைச் சுருதிமுறை
வழுவாமற் றொடுத்த பாடல்
எஞ்சலிலா வகைமுறையே பழைய னூரா
ரியம்புமொழி காத்தகதை சிறப்பித் தேத்தி ".

என்றும் அவர் கூறிச் சேறலால் 12-ம் நூற்றாண்டிலும் இப் பழையனூர்ச் சரிதை பெருவழக்காக அறியப்பட்டதொன்று என்று போதருகிறது.

சாலிவாகனம் 1228-(காலம் அபிதான சிந்தாமணியிற் கண்டது)க்குச் சரியான கி. பி. 1306ல் இருந்தவராகக் கருதப் படும் உமாபதி சிவாசாரியார் சேக்கிழார் புராணத்துள் பழைய னூர்ச் சரிதை காணப்பட்டுள்ளமை முன்பே குறிக்கப்பட்டது. இவர்கள் காலத்துக்குப் பிற்பட்டு 14-ம் நூற்றாண்டைச் சேர்ந்த வராகக் கருதப்படும் வாமனமுனிவர் தம் காலத்துப் பெரிதும் பேசப்பட்டு வந்த இவ்வரலாற்றினை அறிந்தாராதல் வேண்டும். அதனாலேயே அவர் 'பழையனூர் நீலகேசி' என்று குறிப்பிட் டார்.

நீலி பேய்மகள் என்பதனை

"நாடும்ம நாடாளரசும் நகரும் நகர்சூழ்
காடும் கடவுள் புகனீக்குதல் காரணம்மாத்
தேடும் சிறுபேய் பெரும்பேய்த்தியைச் சென்றுபற்றும் பாடும்"

என்னும் நீலகேசி எட்டாம் பாடலும், (இதனுள் பெரும்பேய்த்தி என்றது நீலகேசியை; அவளைப்பற்றும் பகுதியும் என விரிக்க.)

"இடம்பக மகளிவள் பெரிதும் இராசபுத்திரியலளெனவே" என்னும் (இதனுள் இடம்பகமகள் = பேய்மகள்) 64-ம் பாடலும் அறிவுறுத்தும்.

அழகிய பெண்வடிவெடுத்து வணிகன் பின் வந்ததுபோல முனிச்சந்திரனையும் அழகிய பெண்வடிவெடுத்து மயக்க முயன்றதாகச் சொல்கிறது,

"சிந்தித்தாளிது செறியெயிற் றரிவைய துருவாய்ப்
பந்தித்தாகிய பழவினை கெடுகென"

என்னும் 58-ஆம் பாடல் மேற்கண்ட முடிபுகளால் வாழ்க் கையின் முற்பகுதியில் பழையனூர் நீலியாக இருந்த அப் பேய் மகள் பிற்பகுதியில் நீலகேசி என்னும் பெயருடன் முனிச்சந் திரன்பால் அறவுரை பெற்றுச் சமயவாதியாக மாறியிருத்தல் வேண்டும் என்று தெரிகிறது.

காலவேகத்தின் சுழலில் அகப்பட்டு இங்ஙனமே பழந் தமிழுண்மைச் சரிதங்களில் பற்பல இடையே சிதைந்ததன் காரணம் முறையே வரலாறு தொகுக்கும் பழக்கம், நம் தமிழ ரிடைப் பண்டைநாள்தொட்டு இல்லாத குறையேயாம். இதுவே முடிந்த முடிபு என்பது அன்று. இன்னும் புதிய சான்றுகள் வெளிப்பட்டு இம் முடிபு மாறுதலும் கூடும். நீலகேசியின் மேலெழும் ஆராய்ச்சிக்கு இஃதோர் அடிநிலை என்றே கூறல் சாலும்.

---

# அருமை உவமை

[திரு. பா. சூரியநாராயணன், B. A. Hons]

தமிழ்மக்கள் தலைச்சங்க காலமுதல் உவமையணி ஒன்றையே அறிந்திருந்தனர். அவ்வணியே இக்காலத்தில் தமிழிலக்கியத்தில் மலிந்து காணப்படும் பல்வேறு அணிகளையும் அடக்கிய பொது அணியாகக் கையாளப்பட்டது. உவமையணி ஒன்றே தொழிலுவமம், வடிவு உவமம், மெய்யுவமம் எனப் பல்வேறு அணிகளாகக் கிளைத்திருப்பதால், உவமையணி ஒன்றே சங்கத் தமிழிலக்கியத்திற்குச் சிறப்பாக அமைந்து, தமிழ்மக்களுக்கே உரியதாகத் தொல்காப்பியர் கால முதற்கொண்டு விளங்குகிறது.

சங்க இலக்கியங்களில் ஒன்றாகிய சிறுபாணாற்றுப்படை என்ற நூலில், ஆசிரியர் இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார், தமது பாட்டுடைத் தலைவனாகிய ஒய்மாநாட்டு நல்லியக்கோடனைத் தாம் காணச் செல்லுகையில் எதிர்ப்படும் இயற்கைக் காட்சியைப் பின்வரும் அடிகளில் ஒருவமையின்மூலம் படம் வரைந்து காட்டுகிறார்.

"மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை
அணிமுலைத் துயல்வரூஉம் ஆரம் போலச்
செல்புனல் உழந்த சேய்வரல் கான்யாற்றுக்
கொல்கரை நறும்பொழில் குயில்குடைந்து உதிர்த்த
புதுப்பூஞ் செம்மல் சூடிப் புடைநெறித்துக்
கதுப்பு விரித்தன்ன காழக நுணங்கறல்." (சிறுபாண்: க-எ)

ஒரு மலையில் தோன்றி, அதனைச் சுற்றி, வளைந்து, ஓடிவரும் காட்டாற்றை, நிலமாகிய பெண்ணின் இருமார்புகளிலும் கிடந்து அசையும் முத்துவடத்திற்கு உவமையாகக் கூறுகிறார். காட்டாற்றின் எழுச்சியும், அதன் வளைவான தோற்றமும் புலவருக்கு ஒரு பெண்ணின் மார்பிற் றவழும் முத்துவடத்தை நினைவூட்டுகின்றன. அக்காட்டாற்றில் இளவேனிற்காலத்தில் நீர் வற்றியபின், அதனுடைய பழைய நீரோட்டத்தால் சிறிய அலைகள்போலப் பரந்து கிடக்கும் பொடிப்பொடியான கருமணலும், அதன்மீது குயில்கள் உதிர்த்த பூக்களும், ஒரு பெண்ணின் கரிய, சுருண்ட, மலர் சூடிய கூந்தலை விரித்துவிடப்பட்டிருப்பதை நினைவூட்டுகின்றன.

சங்கப்புலவர் பலர் உவமையை மட்டும் விரித்துக்கூறிப் பொருளைக் குறிப்பாக உணரும்படி செய்யும் இயல்பினர். புறநானூறென்னும் சங்கநூலில் 204-வது செய்யுளின் ஆசிரியராகிய கழைதின்யானையார் என்பவர் வல்வில் ஓரி என்னும் குறுநில

மன்னனைக் காணச்சென்றார். அவன் அவருக்குப் பரிசில் தரக் காலந்தாழ்த்தமையால் வருந்தி, வறியவர்க்கு அவர்கேளா முன்னம் கொடுக்கும் வண்மையே சிறந்ததென்னும் உண்மையை அவனுக்கு ஒருவமையின்மூலம் உணர்த்திச் சென்றார்.

" ஈயென இரத்தல் இழிந்தன்று; அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று;
கொள் எனக் கொடுத்தல் உயர்ந்தன்று; அதன் எதிர்
கொள்ளே னென்றல் அதனினும் உயர்ந்தன்று.
தெண்ணீர்ப் பரப்பின் இமிழ்திரைப் பெருங்கடல்
உண்ணா ராகுப நீர்வேட் டோரே.
ஆவும் மாவும் சென்றுணக் கலங்கிச்
சேறொடு பட்ட சிறுமைத் தாயினும்
உண்ணீர் மருங்கின் அதர்பல வாகும்." (புறம் : உ0௪)

"எனக்கு ஏதாவது பரிசில் கொடுப்பாய்," என்று நான் உன்னிடம் இரந்து கேட்கும் இழிவையும், நீ கொடுப்பதை "எனக்கு வேண்டா" என்று பெற்றுக்கொள்ள மறுப்பதால் எனக்கு ஏற்படும் உயர்ச்சியையும் யான் பெறவில்லை; நான் உன்னிடம் இரப்பவும், நீ "ஈயேன்" என்று மறுக்கும் சிறுமையையும், நான் உன்னிடம் இரவாமலே, நீயே வலிய "இதைப் பெற்றுக்கொள்" என்று பொருள் கொடுக்கும் பெருமையையும் நீ அடையவில்லை, என இவ்வாறாக, புலவர் அரசனுக்குக் கொடைத்திறம் இன்மையைச் சுட்டிக்காட்டுகிறார். பிறர்க்கீயாத பெருஞ்செல்வருக்குக் கடலைக் குறிப்பாக உவமிக்கிறார். சுனையைப் பிறர்க்கீயும் திறமுடைய கொடையாளர்க்கு உவமையாகக் கூறுகின்றார். இவ்வாறே பிறிதுமொழிதலணியாக உவமையைத் திருவள்ளுவரும் கையாளுகிறார்; வீரரல்லாதார் பலர் ஒன்றுகூடி ஆர்த்தாலும், வீரரொருவருக்கு ஒப்பாகமாட்டார் என்னும் கருத்தை,

" ஒலித்தக்கால் என்ஆம்? உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும்" (திருக்குறள்: எசுஙு)

என உவமையாகச் சுட்டிக்காட்டுகிறார்.

கம்பரும் உவமைகளை அழகாகக் கையாளுவதில் சிறந்தவர். தாடகை என்னும் அரக்கியை இராமன் கொல்லுவதற்காக விடுத்த அம்பின் விரைவை,

"சொல்ஒக்கும் கடிய வேகச் சுடுசரம்\கரிய செம்மல்
அல்ஒக்கும் நிறத்தி னாள்மேல் விடுதலும், வயிரக் குன்றக்
கல்ஒக்கும் நெஞ்சில் தங்காது, அப்புறம் கழன்று, கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே"

என, கல்வியறிவற்ற கீழ்மக்களுக்குக் கற்றார் எடுத்துக்கூறும் மெய்ப்பொருள் மனத்துள் தங்காது அக்கணமே நீங்கிவிடுவதற்கு ஒப்பாகக் கூறுகிறார். இராமனும் சீதையும் கோதாவரி ஆற்றின் வளம் கண்டு மகிழுகையில் ஆங்குக் காணப்படும் அன்னப்பறவைகளின் மென்னடையை, இராமன் சீதையின் மெல்லிய நடைக்கும், அங்கு நீர்குடித்துவிட்டுப் போகும் யானைகளின் நடையை, சீதை இராமனின் பெருமித நடைக்கும் ஒப்பாகக் காண்கின்றனர்; இதனை அவ்விருவருடைய உள்ளக் கிளர்ச்சியை அவர் சொல் ஓவியத்தால் கீழ்வருமாறு காட்டுவதில் காணலாம் :

ஓதிமம் ஒடுங்கக் கண்ட உத்தமன் உழைய ளாகும்
சீதைதன் நடையை நோக்கிச் சிறியதோர் முறுவல் செய்தான்
மாதுஅவள் தானும் ஆண்டு வந்துநீர் உண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கிப் புதியதோர் முறுவல் செய்தாள்.

ஏறக்குறைய 1500 ஆண்டுகளுக்குமுன் தமிழ்நாட்டில் தோன்றியவரும், சைவ சமயத் தலைவருள் சிறந்தவரும், உள்ளமுருகிப்பாடிய தம் பாடல்களை மேனாட்டு அறிஞரான ஜி. யு. போப் ஐயர் முதலானவரும் விரும்பிப் போற்றி மொழிபெயர்க்கும்படியான சிறப்பைப் பெற்றவருமான மாணிக்கவாசகர் என்னும் பெருந்தகையார் இயற்றிய திருவாசகம் என்னும் அரிய நூலினுட் காணப்படும் உவமைகளே மக்கள் உள்ளத்துள் இயற்கையாக எழும் இறை அன்பு என்னும் சீரிய உணர்ச்சியைப் படம்பிடித்துக் காட்டுபவை. "கனிவிற்கு மாணிக்கவாசகர்" எனப் பெயர்பெற்ற இப்பெரியார், இறைவனிடத்து அன்பு முதிர்ந்து பக்குவமான ஓரடியவரது உள்ளத்தைத் தாய்ப் பசுவினிடத்து அதனது கன்று கொண்டுள்ள அன்புமிக்க உள்ளத்திற்கு ஒப்பாகக் கூறுகிறார்; ஓரோவிடங்களில் இறைவனை அன்னையாகவும், அப்பனாகவும் உள்ளமுருகிப் போற்றுகிறார்.

"என்னை 'அப்பா, அஞ்சல்!" என்பவர் இன்றி, நின்று, எய்த்து அலைந்தேன்
மின்னை ஒப் பாய்! விட் டிடுதிகண் டாய்; உவ மிக்கின்மெய்யே
உன்னைஒப் பாய், மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே!
அன்னைஒப் பாய்! எனக்கு அத்தன்ஒப் பாய்! என் அரும்பொருளே!"

இறைவன் தனது அருளை வேண்டுபவர்க்கு உவந்தளித்து, அவரது மாசைப்போக்கி, பேரின்பமென்னும் தேனை, அவர்களுக்கு, ஒரு தாய் தன் குழந்தை இன்புறவேண்டி அதற்குத் தன் பாலைப் பரிந்து ஊட்டுவதுபோல, ஊட்டுகின்றான். இத்தகைய பேரின்பப் பெருவாழ்வளிக்கும் இறைவனது பேரருளையே,

"பால்நினைந்து ஊட்டும் தாயினும் சாலப் பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி, உள்ஒளி பெருக்கி, உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த செல்வமே! சிவபெரு மானே!
யான் உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந் தருளுவது
[இனியே"

என வியந்து போற்றுகிறார். தாய்போலும் தண் அருளால் உயிர்கட்கு இன்பம் நல்கும் இறைவனையே தான் எண்ணி எண்ணி உள்ளம் நெக்குருகிப் போற்றவேண்டும். இதைத் தவிரத் தமக்கு வேண்டுவதொன்றில்லை என்று இப்பெரியோர் விடுக்கும் ஒரு வேண்டுகோளில்தான் அருமை உவமை காணப்படுகிறது.

"உற்றாரை யான்வேண்டேன்; ஊர்வேண்டேன்; பேர்வேண்டேன்;
கற்றாரை யான்வேண்டேன்; கற்பனவும் இனியமையும்;
குற்றாலத் தமர்ந்துறையும் கூத்தா! உன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்து, உருக வேண்டுவனே."

இறைவனது அருள்திறத்தை உணர்ந்த பெரியாருக்கு உற்றாரும், உறவினரும், ஊரும், பேரும், புகழும், கற்றவர்நட்பும், கல்வியறிவும் எம்மட்டு? அவருக்கு வேண்டுவதெல்லாம் இறைவனது பெருங்கருணையை நினைந்துநினைந்து, உளமுருகிப் பாராட்டிக் கொண்டிருப்பதே. இக்கருத்தை விளக்க, இங்கு ஆ அல்லது பசுவாக இறைவனையும், அப்பசுவின் கன்றாக உயிரையும் மாணிக்க வாசகர் "கற்றா" என உவமானமாகக் கூறியிருப்பது மிகவும் பொருத்தமாகக் காண்கிறது. உலகத்தில் நுகரக்கூடிய பல்வேறு இன்பங்களுக்கும், ஒரு அளவும் முடிவும் உண்டு; முடிவில்லாத, நிறைந்த பேரின்பத்தை அடையத் தூண்டும் நிலையைத் தான், மாணிக்க வாசகர் "கற்றாவின் மனம்போலக் கசிந்துருகும்" நிலையாக இவ்வாறு யாவரும் எளிதில் உணரும் வண்ணம் எடுத்துரைத்தார்.

அடியவர் வரலாற்றைக் கூறும் பெரியபுராணத்திலும், இறைவனைக் கற்றாவாகவும், அடியவரைக் கன்றாகவும் உவமித்து, அதனாசிரியர் சேக்கிழார் கூறக் காண்கிறோம். சுந்தரமூர்த்தி நாயனார் சேரமான்பெருமாள்நாயனாருடன் திருவையாற்றிலெழுந்தருளியுள்ள இறைவனைக் கண்டு தொழச் செல்லுகையில், குறுக்கிட்ட காவிரியாற்றில் வெள்ளம் கரைபுரண் டோடியது. சுந்தரருக்கோ தம்முடன் வரும் நண்பருடன் ஐயாறப்பரைத் தொழவேண்டுமென்ற உள்ளக் கிளர்ச்சி. ஆற்றின் கரையிலிருந்தபடியே மறுகரையில் கோயிலினுள் வீற்றிருக்கும் இறைவனை "ஐயாறுடைய அடிகளோ" என்று தாம் பாடிய பதிகத்தில் கன்று தாய்ப்பசுவை அழைப்பதுபோலக் கூவி அழைத்தார். உடனே தன் கன்றுக்கு என்ன நேர்ந்ததோ என்று

கதறி, அக்கன்றுக்கு நம்பிக்கையும் உற்சாகமும் ஊட்டுவதற்காகத் தாய்ப்பசு மறுகுரல் கொடுப்பது போல, ஐயாறப்பரும் "ஓலம்" என உலகெங்கும் கேட்க ஒலி எழுப்பினர்; காவிரியும் வெள்ளத்தைக் குறைத்து வழிவிட்டது; தவித்து நின்ற சுந்தரரும் நம்பிக்கையும் மகிழ்ச்சியும் கொண்டார். இதனையே ஆசிரியர் சேக்கிழார்,

"பரவும் பரிசென் றெடுத்தருளிப் பாடுந் திருப்பாட் டினின்முடிவில்
அரவம் புனைவார் தமை 'ஐயா றுடைய அடிக ளோ'என்று
விரவும் வேட்கை யுடனழைத்து விளங்கும் பெருமைத் திருப்பதிகம்
நிரவும் இசையில் வன்றொண்டர் நின்று தொழுது பாடுதலும்."

"மன்றில் நிறைந்து நடமாட வல்லார் தொல்லை ஐயாற்றில்
கன்று தடையுண் டெதிரழைக்கக் கதறிக் கனைக்கும் புனிற்றுப்போல்
ஒன்றும் உணர்வாற் சராசரங்கள் எல்லாங் கேட்க, 'ஓலம்' என
நின்று மொழிந்தார்; பொன்னிமா நதியும் நீங்கி நெறிகாட்ட."

கம்பரும் இறை—உயிர் இவற்றைப் பிணைக்கும் அன்பிற்குக் கற்றுவின் பிணைப்பை உவமையாகச் சுட்டிக் காட்டுகிறார். விராதனென்னும் அரக்கனை இராமனும் இலக்குவனும் கொல்ல, அவன் இறுதியில் நல்லுணர்வு வரப்பெற்று அவர்களை வணங்கிப் புகழுகிறான். இராமனை நோக்கி அவன் "தாய்ப்பசுவைக் கன்றுகளும், கன்றுகளைத் தாயும் அறிந்துகொள்ளுவது இயல்பு; எல்லா உயிர்களுக்கும் தாயாகிய நீ அவ்வுயிர்களை அறிவாய்; அதுபோல் அவ்வுயிர்களும் உன்னை அறிந்து கொள்ளாமல் மயங்கித் துன்புறுவதென்னை?" என வியந்து போற்றுகிறான்.

"தாய்தன்னை அறியாத கன்றில்லை; தன் கன்றை
ஆயும் அறியும்; தாயாகின், ஐய!
நீ அறிதி எப்பொருளும்; அவை உன்னை நிலையறியா:
மாயை இது என்கொலோ! வாராதே வரவல்லாய்."

மாணிக்கவாசகர் உயிரியல்பை நன்கறிந்தவர். உலக இன்பங்களில் ஈடுபட்டு அவற்றின் முடிவையும் காணும் ஒவ்வொரு உயிரும் கடைசியில் இறைவனது அருளினால்தான் முடிவில்லாத பேரின்பத்தை அடைய இயலுமென்று உணர்ந்து, அவ்விறையருளை வேண்டி இறைவனிடத்து அன்பு பூண்டு நிற்கும். இம்முடிவை நன்கு உணர்ந்து, தாம் எல்லா இம்மை இன்பங்களையும் இளமையில் எளிதில் துறந்து, கற்றுவைப்போல் உயிர்கள் யாவும் இறையருளை வேண்டி உருக வேண்டுமென்று மக்களுக்குக் கனிவோடு கூறும் மாணிக்கவாசகருக்கு நாம் யாவரும் கடமைப்பட்டிருக்கின்றோம்.

---

# இல்வாழ்க்கை

[திரு. மா. ரா. இளங்கோவன்]

**முன்னுரை**

ஒருவன் ஒருத்தியுடனும், ஒருத்தி ஒருவனுடனும் வாழ்வதே இல் வாழ்க்கை. இதனையே வள்ளுவனாரும் வற்புறுத்துகின்றார். திருவள்ளுவர் காமத்துப் பாலில் ஒருவனும் ஒருத்தியுமே காட்சி அளிக்கின்றனர். ஒருவனையும் ஒருத்தியையும் காதல் ஒருமைப்படுத்துகின்றது. காதல்வாழ்க்கையில் இருவர் மனமும் தூய்மைப்படுகின்றது. அவ்வாழ்க்கையில் உறுதி மனப்பான்மையும், அன்பும், கடமை உணர்ச்சியும், பிரிவுநேரின் கலங்கும் பண்பும் நன்கு காணலாம்.

ஒருவனும் ஒருத்தியும்—கணவனும் மனைவியும்—காதலனும் காதலியும் மனமொத்த நிலையில் வாழும் வாழ்வே கவின் பெறு வாழ்வாகும். அவ்வாழ்வே, அன்பு வாழ்க்கை, காதல் வாழ்க்கை எனப்படும். எனவே, இன்பம் மிகுந்த இல்வாழ்க்கையைச் சற்று விரிவாக அறிவோம்.

**இயற்கைக் காதல்**

சிறுவர் கூட்டம் ஒன்று மணற்சிற்றில் அமைத்து, நிலாச் சோறுக்கி, இசைபாடி இன்பமாய்க் காலம் கழித்தது. அங்கு ஒரு சிறுவன், சிறுமி ஒருத்தி அமைத்த மணற்சிற்றிலைக் காலால் உதைத்து, அழித்துவிட்டு, அதனுடன் அமையாது அவள் ஆட வைத்திருந்த பந்தையும் எடுத்துக் கொண்டோடினன். சிறுமிக்கு, அன்று அவன் மேல் கோபம். இந்நிகழ்ச்சி அவள் மனத்தில் நிலைத்த இடம் பெற்றது.

காலம் கடக்க, பருவம் மாறுகின்றது. சிறுமி தலைவி ஆகின்றாள். சிறுவன் தலைவன் ஆகின்றான். அடிக்கடி அவர்கள் காண்பதுண்டு. இப்போது அவள் மணற்சிற்றில் அமைக்க விரும்புவதில்லை. அங்ஙனமே அவனும் அவள் அமைக்கும் மணற்சிற்றிலைக் காலால் சிதைத்து அழிக்க விரும்பவில்லை. ஆனால் அவர்களிடை 'அன்பு' வளர்ந்தது. அது காதல் எனப்பட்டது.

ஒருநாள், தலைவி, தன் தாயாருடன் தன்னில்லில் அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தாள். அப்போது, "உண்ணும் நீர் வேண்டும்," என்ற குரல் கேட்ட தலைவியின் தாய், பொற்சிரகத்தில் நீரை மொண்டு வேண்டுபவனுக்கு அளிக்குமாறு தலைவி

யைப் பணித்தாள். தலைவியும் தாய்சொல் தட்டாது நீர்கொண்டு வந்தாள். வந்தவள் தன் காதலனைக் கண்டாள். அவன் அவள் முன் கையைப் பற்றி இழுத்தான். நாணம் பெருக, தலைவி, "அன்னாய்!, இவன் செய்வது காண்," என்று கூவினாள். மகளின் அலறல்கேட்ட தாய் ஓடோடிவந்து, 'என்ன?' என்றாள். 'ஒன்றுமில்லை; நீர் பருகுங்கால் இவர் விக்கினார்,' என்று நடந்ததைத் தாயறியாது மொழிந்தாள். தாயும் அவனுக்கு இரங்கி, அவன் முதுகைத் தடவிக்கொடுத்தாள். அப்போது அவன் அவளைக் கடைக்கண்ணால் கண்டு, இடையிடையே புன்னகை செய்து, அதனால் அவள் குறிப்பை அறிந்ததுபோல அவன் முகம் காட்ட அவள் கண்டாள். இச்செய்தியைத் தலைவி தோழிக்குக் கூறினாள். அப்போது அவள் அவனைக் "கள்வன் மகன்" என்று சிறப்பித்தாள். அங்ஙனம் அவள் அவனைச் சிறப்பிக்கக் காரணம் யாது? ஆம். அதன் காரணத்தைத் தலைவியின் மூலம் அறிவோம்:

"சுடர்த்தொடீஇ, கேளாய்! தெருவில் நாமாடும்
மணற்சிற்றில் காலிற் சிதையா அடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யும் சிறுபட்டி, மேலோர்நாள்
அன்னையும் யானும் இருந்தேமா, இல்லிரே!
'உண்ணுநீர் வேட்டேன்' என வந்தாற்கு அன்னை,
'அடர்பொற் சிரகத்தால் வாக்கி, சுடரிழாய்,
உண்ணுநீர் ஊட்டிவா' என்றாள்; எனயானும்
தன்னை அறியாது சென்றேன்;மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலிய, தெருமந்திட்டு,
'!அன்னாய் இவனொருவன் செய்ததுகாண்!' என்றேனா,
அன்னை அலறிப் படர்தர, தன்னையான்,
'உண்ணுநீர் விக்கினான்' என்றேனா, அன்னையும்
தன்னைப் புறம்பழித்து நீவ, மற் றென்னைக்
கடைக்கண்ணாற் கொல்வான்போல் நோக்கி நகைக்கூட்டம்
செய்தான் அக் கள்வன் மகன்." —(கலி: 51)

**காதல் தொடர்பு**

இங்ஙனம் அடிக்கடி தலைவனும் தலைவியும் காண்பதுண்டு; பேசி மகிழ்வதுண்டு; தாங்கள் இணைந்து வாழப்போகும் எதிர் காலத்தைப் பற்றிப் பல பல நினைப்பதுண்டு: தோழியின் உதவியால் தலைவன், தலைவியின் நட்பைப் பெற விழைவான்.

காதல் வாழ்க்கைக்கு உறவுமுறை என்பதொன்றும் இல்லை. உயர்வு—தாழ்வு என்பதொன்றும் இல்லை. ஆனால், காதல்

வாழ்க்கை அன்பால் மிளிர்வது. பயிரிடுவதற்குத்தக்க செம்மையான நிலத்திற் பெய்த நீர்போன்ற தன்மைகொண்டது காதல்.

தலைவன், தலைவியை நோக்கி, "பெண்ணே, என் தாயும் உன் தாயும் எம்முறையில் தொடர்பு கொண்டவர்? அங்ஙனமே என் தந்தையும் உன் தந்தையும் எம்முறையில் உறவினர்? அல்லது நானும் நீயும்தான் எங்ஙனம் ஒருவரை ஒருவர் அறிந்தோம். காரணம் ஏதும் புலப்படவில்லையல்லவா? ஆம். அன்புடை நம்மிருவர் நெஞ்சங்கள்—பயிரிடுதலுக்கேற்ற செம்மையான நிலையிலுள்ள நல்ல நிலத்திற் பெய்த நீர்போல—கலந்ததாலே நாம் ஒன்றுபட்டோம்," என்று காதல்தொடர்பைப் புலப்படுத்துகின்றான்.

> "யாயும் ஞாயும் யார் ஆ கியரோ?
> எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?
> யானும் நீயும் எவ்வழி அறிதும்?
> செம்புலப் பெயல்நீர் போல
> அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே." —(குறுந்: 40)

**காதல் உறுதி**

இங்ஙனம் இயற்கைக் காதலில் ஒன்றிய தலைவனும் தலைவியும் மணந்து வாழ விரும்புகின்றனர். அன்புடை நெஞ்சங்கள் செம்புலப் பெயல்நீர் போலக் கலந்ததால் அவர்களிடை உண்மைக் காதல் உலவுவதை நாம் அறிந்தோம். உண்மை அன்பு உறுதி அன்பாக மாறுகின்றது. என்றும் தலைவனும் தலைவியும் பிரியாது வாழ விரும்புகின்றனர். காதல் உறுதியினைத் தலைவி, தலைவனை நோக்கி, "நாம் பிறவிதோறும் அன்புடைக் காதலன் காதலியாக வாழவேண்டும். 'என் கணவன் நீயே. உன் காதலி நானே' என்னும் முறையில் நம் வாழ்க்கைக் கலம் செல்ல வேண்டும்," என்று உரைத்தாள். இஃது அவளது உறுதி உள்ளத்தைக் காட்டுகின்றது அல்லவா?

> "..................................
> இம்மை மாறி மறுமை ஆயினும்
> நீ ஆ கியர்எங் கணவனை
> யான்ஆ கியர்நின் நெஞ்சுநேர் பவளே" —(குறுந். 49)

**நல்வாழ்க்கை**

இவ்வுறுதிப்பாடுடையவள் தான் விரும்பியவனை மணந்து வாழ விரும்பாமலிருப்பாளா? விரும்பினாள்—மனம் ஒத்த மணம் நடந்தது. காதலனும் காதலியும் நடத்தும் நல்வாழ்க்கையைக் காணச் செவிலி, அவர்கள் கடிமனை நோக்கிச் சென்று

மீண்டாள். மீண்டவள் நற்றாயிடம், "காதலர்கள் இருவரும் கருத்தொருமித்து வாழ்கின்றனர். தலைவன் தலைவியைப் பிரியாது உறைகின்றான். இன்றியமையாச் சில செய்திகள் குறித்துப் புறப்படும் தலைவன், விரைவில் மீள்கின்றான். இதனால் தலைவி மகிழ்ச்சியோடு உள்ளாள் என்பதை நீ அறி," எனத் தலைவியின் நல்வாழ்க்கையைக் கூறினாள்.

தன்மகளின் வாழ்க்கை நிலையினையறிய விழைந்த நற்றாய்க்குச் செவிலி, "வாணன் தஞ்சைமாநகரில், மேலே வண்டு பண்ணை முரலப்பட்ட குங்கும மாலையணிந்த தோளையுடைய வரது பங்கயம்போன்ற கண்ணிடத்தருளைப் பெற்று வாழப் பட்ட மடமாதர் மண்மனையாயினது, விண்ணுலகில் அமரர் விரும்பும் அமராவதி வெள்ளமாகிய கடல் சூழ்ந்த மண்ணுலகின் மேல் வந்தடைந்தாலொத்த வாழ்க்கையதானது," என்று கூறித் தலைமகளது நல்வாழ்க்கையைப் புலப்படுத்துகின்றாள்.

அன்பு

இல்வாழ்க்கை நல்வாழ்க்கையாய் நடக்கும்போது அது அன்பின் அடிப்படையில் உழலுவது என்பதில் ஐயமில்லை அல்லவா? ஒத்த மனம் கொண்ட ஒருவனும் ஒருத்தியும் நடத்திய இல்லறத்தில் நிகழ்ந்த அன்புக்காட்சி ஒன்று மிகச் சிறந்ததாகத் தோற்றமளிக்கின்றது.

செல்வக்குடியில் பிறந்தவள் அவள்; வீட்டுப்பணிகளை இதற்குமுன் செய்தறியாதவள். எனவே, அவளுக்கு எல்லாம் இடர்ப்பாடாகத் தோன்றியது. ஒருநாள் வைகறையில் துயில் நீத்து, நீராடித் தூய ஆடை உடுத்து சமையல் செய்யலானாள் அவள். முற்றிய தயிரைத் தன் காந்தள் மெல்விரலால் பிசைந்தாள். அதற்குள் அவள் ஆடை சிறிது கட்டு நெகிழ்ந்தது. ஆயினும் அவள் பதம் கெடாதொழியத் தன் ஆடையைக் கை கழுவாது உடுத்துக்கொண்டாள். பின்னர்த் தாளிக்கும் பணியில் ஈடுபட்டாள். அப்பொழுதெழுந்த நறும்புகை அவள் குவளை மலரையொத்த கண்களிலே குப்பென்று படர்ந்தது; கண்ணீர் மல்கியது; இருப்பினும் கண்களைத் துடைத்தாளில்லை. அவள் கருத்தெல்லாம் பக்குவம் கெடக்கூடாது என்பதிலேயே இருந்தது.

தலைவன் வந்தான்; உண்ண அமர்ந்தான். இனிய புளிப்பையுடைய அக் குழம்பை அவனுக்குப் படைத்த உணவிலிட்டாள் தலைவி. தலைவன், 'மிகவும் சுவையுடன் கூடியுள்ளது குழம்பு' என்று கூறியவாறே உண்டான். தலைவியின் முகம் மலர்ந்தது. அவள் முகத்தில் புன்னகை அரும்பியது. இக்காட்சி உண்மையி

லேயே நம்முள்ளத்தை மகிழ்விக்கின்றதல்லவா? அன்பு இருக்குமானல் மண்ணுலகு இன்பமயமாய்க் காணும் என்ற உண்மை நமக்குத் தெரிகின்றது.

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே" (குறுந்: 167)

கடமை உணர்வு

அன்பினல் பிணிக்கப்பட்ட தலைவன் தலைவியர் வாழ்க்கை இன்பம் பயப்பது என்பதை முன்னர்க் கண்டோம். அன்பினையே அடிப்படையாய்க்கொண்டு சிறக்க வாழ்ந்த காதலருள் கடமை உணர்வும் தலைகாட்டத் துவங்கியது. கடமை உணர்வில் தலைவி சிறந்திருந்தாள். அவள் தலைவனது வருவாய்க்கேற்பச் செலவிடும் தன்மை கொண்டிருந்தாள்.

ஒருசமயம் தலைவனது வருவாய் குறைந்தது. அவளோ செல்வக் குடியினள். ஆயினும் வருந்தாது, காதலன் வாழ்வே தன் வாழ்வு என எண்ணி, வேளைக்கு உண்ணமல் காலந் தாழ்த்துக் குறைந்த அளவில் உண்டு குடும்பத்தில் அமைதியையும், சிக்கன முறையையும் கையாளுகின்ருள் அவள். இந் நிகழ்ச்சி, அவள் கடமை உணர்வு கொண்டவள் என்பதைத் தெரிவிக்கின்றது அல்லவா?

அவளின் ஏழ்மை நிலையறிந்து அவள் தந்தை, அவளும் அவள் கணவனும் வாழவேண்டி அனுப்பிய பொருள்களையெல்லாம் அவள் பொருட்படுத்தவில்லை. கணவனது வருவாயுடன் வாழ்வதே சிறந்தது என்று உணர்ந்ததால். இதனை,

"கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்
ஒழுகுநீர் நுணங்கு அறல்போலப்
பொழுதுமறுத்து உண்ணும் சிறுமது கையளே" (நற்றிணை: 110)

இங்ஙனம் பல்லாற்ருலும் சிறந்து விளங்கும் இல்லறம் பல்லோராலும் போற்றப்படுவதாகும். இவை போன்ற பல நல்ல காட்சிகள் சங்க இலக்கியங்களுள் உள்ளன. அக்கால இல்வாழ்க்கை முறைகள் நம் உள்ளத்தை ஈர்க்கின்றன. அவை நமக்கு வழிகாட்டிகளாகின்றன; நம்மால் பெரிதும் போற்றப்படும் நிலையிலுள்ளன. அவைகளைத் தமிழராய நாம் கற்று மகிழ்தல் வேண்டும்.

---

# திருக்குறட் கவிதைக்கேணி

[தருமை. திரு. சொ. சிங்காரவேலன்]

உயரிய கவிதைக்கேணி, உரைக்க உரைக்கப் படிக்கப் படிக்க, எண்ண எண்ண, ஆய ஆயப் புதுப்புதுச் சுவைநீரைத் தந்துகொண்டேயிருக்கும். ஆம்; அதுதான் கவிதைக்கேணி. அதன் ஊற்றுக்குழிதான் கற்பனை! கற்பனை இன்றேல், நீரைச் சுவைபெற நிரப்பும் ஊற்றுக்குழி இன்றேல், கவிதைக்கேணி நிறையாது;—சிறக்காது! இங்ஙனம் புகலுந்தொறும் புதுக் கருத்துக்கள்—சீர்திருத்தப்பட்ட கருத்துக்கள்—காலத்துக் கேற்ற கருத்துக்கள் இன்ன பிற கருத்துக்களைத் தன்னுடைந் தார்க்குத் தன்மானத்துடன் தந்து, என்றும் முழு அழகோடும் மிளிர்ந்து, தமிழக முன்னணியில் இளைஞர் உலகமே! வருக வென தமிழ்முரசு கொட்டித் தமிழர்களைக் கல் இல்லாத—முள் இல்லாத நல்ல பாதையிலே செல்லத் தூண்டிநிற்குந் திருக்குறளே தமிழகத்திலேயே—ஏன்?—உலகிலேயே எத்துறையினும் மிக்க தொரு கவிதைக்கேணி. கேணியைத் தோண்டித்தோண்டிப் புதுத் தண்ணீர்—சுவைத் தண்ணீர் காணல் வேண்டும். அன்றிப் பூச்சி, புழு, மண் இவை இடையிடையே விராய நீரைக் காணின், அம்ம! யாரும் அஞ்சுவர். காணிலேயே அஞ்சுவரெனின், சுவைக்கப்புகின் யாது நிகழுமென்பது கூறுமையே பெறப் படும். இவ்வரலாற்றினை யொத்தே, கவிதைக்கேணியைத் தோண்டித்தோண்டி நல்ல கருத்துநீரைக் காண்பார் சிலர்; கெட்ட கருத்துக்களையே கொள்வார் பலர்; இதனையொப்பவே, திருக்குறளாம் கவிதைக்கேணியினைத் துருவி, நல்ல கருத்து வளங் கண்டவர் சிலர். பூச்சி, புழு, மண் போன்ற பல ஏதங்கள் விராய கருத்துவளங் கண்டு, தம் கருத்துநீரையும் அதனுடன் பிணைத்து இது திருக்குறட் கேணியின் செழுநீரே என்றார் சிலர். இவருட் பின்னவர் பட்டியலிலே சேர்க்கத்தக்க ஒருவர், திருக்குறள் உரையாசிரியர் பதின்மருள் பீடுடையரென மதிக் கப்பட்ட பரிமேலழகர்!

இவர் வளமாக உரையெழுத வல்லோர்; நயம்பட விளக் கிச் செல்லும் நல்லோர்; செய்யுளடிகளை அப்படியே அணி பெற ஆளுவர்;

"திறனல்ல தற்பிறர் செய்யினும்"—என்ற குறளிலே, 'துன்பத்திற்கு நோதலாவது,' 'உம்மை—பெரிவாய் நிரயத்து வீழ்வர் கொல்,' என்றுபரிதல் என்று கூறுமாற்றானும்,

"அமிழ்தினும் ஆற்ற வினிதே"—என்ற குறளில், 'சிறு கையா னளாவலாவது இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும், நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்தல்,' என்றும்,

"அன்பிலா ரெல்லாம் தமக்குரியர்"—என்ற குறளில், "என்புமுரியராதல்,' 'தன்னகம் புக்க குறுநடைப் புறவின், தபுதி யஞ்சிச் சீரை புக்கோன்,' முதலாயினார்கட் காண்க," என்றும், கூறுமாற்றானும் காண்க! இவை அதற்குச் சில எடுத்துக் காட்டுகள்!

மேலும், பரிமேலழகர் ஐம்பெருங் காப்பியப்பயிற்சி மிக்க வர் என்பது தெளிவு. இவர் சில பல விடங்களில் ஐம்பெருங் காப்பியங்களினின்றும் சிறந்த இடங்களை எடுத்துக்காட்டி யிருக்கின்றனர்:

சிலப்பதிகாரம்:—

"இம்மைச் செய்தன யானறி நல்வினை
உம்மைப் பயன்கொல் ஒருதனி யுழந்தித்
திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது"

என்ற அடிகளையும்,

சிந்தாமணி:—

"காதல் மிக்குழிக் கற்றவுங் கைகொடா
வாதல் கண்ணகத் தஞ்சனம் போலுமால்"

என்ற அடிகளையும்,

வளையாபதி:—

"எழுமை யென்றது வினைப்பயன் தொடரும் எழு
பிறப்பினை. அஃது வளையாபதியுட் கண்டது"

என்ற கருத்தையும், எடுத்துக் காட்டுதலின், இவைமூலம் அழக ரது ஐம்பெருநூல் பயிற்சியை நன்கு அறியலாம். மேலும், 'கற்றறிந்தா ரேத்தும் கலி' யென்று இலக்கியங்களும், பாவல ரும் நாவலரும் கூறுகின்ற சங்ககால இலக்கியமான கலித் தொகையைத் தமிழ்ச்சுவை சொட்டச் சொட்ட இவர் பயின்று இருந்தாராதல் வேண்டும். அவ் விலக்கியத்துள் அழுந்திய உணர்வினராதல் வேண்டும்:

"என்னீர் அறியாதீர் போல இவைகூறின்
நின்னீர வல்ல நெடுந்தகாய்!" (கலி. பாலை: ௫)

"அறிவுடை யந்தணன் அவளைக்காட் டென்றனே"
(கலி. மரு: எ)

"கடியுமிடந் தேற்றாள் சோர்ந்தனள் கை" (கலி. மரு: உஎ)

"உள்ளு வென் னுயிரை யுண்டு" (கலி. குறி: உஉ)

"கண்டவர் இல்லென வுலகத்துள் உணராதார்
தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளுள்
நெஞ்சறிந்த கொடியவை மறைப்பவு மறையாவா
நெஞ்சத்திற் குறுகிய கரியில்லை யாதலின்" (கலி. நெய்: அ)

என்றெல்லாம் உயரிய இடங்கள் பலவற்றை உரிய இடங்களில் எடுத்தாளும் பரிமேலழகரது அறிவுத்திறம் பாராட்டற்பால தொன்றே.

இங்ஙனமாகப் பல்லாற்றானும் இலக்கியப் பயிற்சிமிக்க நம்மழகர், இலக்கணப் பயிற்சியும் மிக்குடையவரே யாவர். என்னை? தொல்காப்பியப் பொருளதிகாரப் புறத்திணையியற் சூத்திர (உ0) நச்சினார்க்கினியருரையினை எடுத்து, "சார் புணர்ந்து"—என்ற குறளுரையில் விளக்குதலானும், "இசைத் தலும் உரிய வேறிடத்தான"—என்ற தொல்காப்பியக் கிளவி யாக்க (ருகூ-ம்) சூத்திரக் கருத்தினை "வகுத்தான் வகுத்த" என்ற குறளுரையிற் காட்டுதலானும், இன்னும் பல முடிபுகளை இலக்கண வரம்புக்குட்பட முடித்துக்காட்டி யிருத்தலானும், இவர்தம் இலக்கணநூற் பயிற்சி இனிது உணரப்படும்.

இனி, இவர்தம் உரைகள் சிலவற்றைத்துருவி, உண்மை யுரை காண முற்படுவோம்.

(க) "இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது"—என்பது குறள்.

'இன்சொல் இனிதீன்றல்'—என்பதற்கு, பிறர் கூறும் இன் சொல் தனக்கின்பம் பயத்தலை யறிகின்றவன்'—எனப் பொருள் கொண்டனர் பரிமேலழகர்.

மணக்குடவர் இவ்வாறே பொருள் கொண்டனர்.

சில சமயங்களில் தான் கூறுகின்ற இன்சொல் தனக்குச் சிலரை நட்பாக்குதலையும், பிறர் தன்னை விரும்புதலையும், அந்நட் பினல் நன்மைகள் பலவற்றைத் தான் இம்மையில் எய்துதலையும், கண்கூடாகவே பார்த்திருந்தும் ஒருவன் வன்சொல் வழங்கு வானேயாயின் அஃது நகைப்பிற் கிடமாம். ஆகவேதான் பிறர்கூறும் இன்சொல் தனக்கின்பம் தருதலைவிட, 'தான்கூறும் இன்சொல் தனக்கின்பம் தருதலே,' சிறந்த பொருளாக இருக்க முடியும்.

ஆகவே, வள்ளுவர் கருத்து அப் பொருளாயிருக்க முடி யாது. என்னை? தன்னலமே கருதும் தறுகணாளரிடம் சென்று,

'பேதையீர், நீவிர் கூறும் இன்சொல்லால் நுமக்கே நலமுண்டாதலை அறிதிரன்றே; வன்சொல்லால்—கடுஞ்சொல்லாம் அப்பயன் எய்திலிரே; ஆயினும் கடுஞ்சொல் வழங்கும் நும் அறியாமை இருந்தபடி யென்னே,' என்றிரங்கிக் கூறுகின்றார் வள்ளுவர். ஆதலால் ஈண்டு ஆசிரியர் கருத்து 'தாம் கூறும் இன்சொல் தமக்கின்பம் பயத்தலையே,' நாடியிருத்தல் வேண்டும்.

ஆசிரியர், தண்டபாணிப்பிள்ளையும் இக் கருத்துக்கு அரண்செய்தல் காண்க.

(உ) கொல்லாமை யென்ற வதிகாரத்திலே, "நன்றாகும் ஆக்கம்"—என்ற குறளுக்கு, தேவர்பொருட்டு வேள்விக்கட் கொன்றால், இன்பமிகும் செல்வம் பெரிதாம் என்று, இல்வாழ்வார்க்குக் கூறப்பட்டதாயினும், துறவானமைந்தார்க்கு ஒருயிரைக் கொல்லவரும் செல்வம்கடை," என்று உரைகூறிப் பின்னே, அடுத்த குறளிலே, "கொலைவினைய ராகிய மாக்கள்"—என்ற குறளிலே, "கொலைவினையரென்றதனுன், வேள்விக்கட் கொலையன்மை யறிக!" என்று கூறிய பரிமேலழகர் தம் கூற்று முன்னுக்குப்பின் முரணாகவன்றோ இருக்கிறது. முன்னே ஒருயிரையும் கொல்லாமையே துறவோர்க்கு அழகாமென்று கூறிப் பின்னேயே, வேள்விக்கண் கொலை செய்யலாம் என்று உரைப்பது எத்துணைக் குற்றமுடைத்து? வேள்விக்கட் கொலை கொலையன்மையா? என்றல்லவா அறிஞர்கள் இந்த இடத்தை மறுக்கின்றார்கள்!

(ங) அன்புடைமை யென்ற தொடருக்கு அதிகார முன்னுரையில், அஃதாவது வாழ்க்கைத் துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார்கட் காதலுடையனாதல் என்று பொருள் கொண்டார் பரிமேலழகர்.

இனி, 'மறத்திற்கும் அஃதே துணை' என்பதற்கு மறத்தை நீக்குதற்கும் அஃதே துணையாமெனவும், ஒருவன் செய்த பகைமைபற்றி உள்ளத்தில் மறம் நிகழ்ந்துழி, அவனை நட்பாகக் கருதி அவன்மேல் அன்புசெய்ய அம்மறம் நீங்குமாதலின், மறத்தை நீக்குதற்கும் துணையாமென்றார் எனவும், பரிமேலழகர் உரை விரித்தனர்.

முன்னே அன்பு என்பது தொடர்புடையார்கட் காதல் என வுரைத்துப் பின்னே இக்குறளில், தொடர்பில்லாப் பகைவர்மாட்டு அன்புசெய்யின் எனவுரைத்துப் போந்தது, இவர் தம் உரையில் முன்பின் முரணுற்ற இரண்டாம் இடம்.

(ச) 'ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும்"—என்ற குறளில்: "பெண்ணியல்பாற் றானாக அறியலாகாமையின் கேட்டதாய் என்றார்" என்று விசேடம் கூறினார் அழகர்.

பெண்ணுக்கு அறிவில்லை; பெண்ணினம் அறிவற்றது என்று கூறுகிறது, இவ்வரி!

"பெண்ணடிமை தீருமட்டும்—
பின்னிந்த வுலகின் வாழ்வுமில்லை"

என்று கவிதை பாடும் இந்நாளிலே, பெண்ணுக்குத் தானாக அறிவில்லை என்ற கருத்தினை வள்ளுவர் தம் கருத்தாக்கிய பரிமேலழகர் தம் திறனை என்னென்று சொல்ல! 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள,' வென்ற வள்ளுவர் தம் கருத்தாக இஃது இருக்க முடியாது.

பிறர் உரை சார்புபற்றாத மெய்யுரையாமாகலின், தன் மகனது சால்பு தன் உள்ளப் பற்றுக்கோடே பற்றியதன்று; உண்மையே என்றறிந்து உவக்குமாதலின் 'கேட்டதாய்' என்றார்.

பெண்ணினத்தின் அறிவைத் தாழ்த்திப் பேசுதற்காக வள்ளுவர் கேட்டதாய் என்று கூறவில்லை; பிறர் கூறுவது சார்பு பற்றிக் கூறப்படாத உண்மையுரையாய் இருக்குமாதலினால், தன் உள்ளம் கூறுவதுமட்டுமல்ல!—சாராத அயலவரும் கூறுகின்றனர் ஆதலினால், உண்மையே என்றறிந்து மகிழ்வெய்துவாளாம், தாய். இதுதான் சரியான முடிவு.

நேரான பாதையிற் சென்று இங்ஙன் முடிவு காணல் நன்றா? கோடுவிக்கும் வழியிற் சென்று இழுக்குச் சாரும் உரைகாணல் நன்றா? இங்கு நாம் கண்ட உரைக்குத் தண்டபாணிப் பிள்ளை கருத்தும் அரண்செய்தல் காண்க.

(ரு) "குடம்பை தனித்தொழிய"—என்ற குறளில் குடம்பை என்பதற்கு முட்டை என்றே பொருள் கொண்டனர். கூடென்றார் சிலர். அக்கூற்றை இரண்டொரு பொருந்தாக் கூற்றுக்களால் மறுத்தனர் பரிமேலழகர்:

மேல்குறளில், உயிர் உடம்பில் நிற்றல் கணப்பொழுதில் நீங்கினும் நீங்கும் என்றுகூறி, இக்குறளில் அதனினும் விரைவாய் நீங்குமென்று கூறினார்.

'கூடு' என்பதே இங்குப் பொருத்தமான பொருளாகும். "புள்ளுடன் தோன்றாமையானும், அதன்கண் மீண்டும் அது புகுதலுடைமையானும் உடம்பிற்கு கூடு உவமையாகாமை யறிக" என்று மறுத்தார் அழகர்.

புள்ளுடன் தோன்றுமையினுல், குடம்பை கூடாகாது எனவே, முட்டையின் நீங்கிய பார்ப்புப் பறக்காமையினுல், குடம்பை முட்டையுமாகாது. அல்லாமலும் முட்டை உருச் சிதைவுபெற்ற பின்னேயே குஞ்சு வெளிவரும். ஆனல் உயிரோ யாக்கையைச் சிதைக்காமல் வெளியேறும் தன்மைத்து. மேலும் இரு வழக்கிலும் யாக்கையைக் கூடென்பார்களே யொழிய முட்டையென்பது மரபுமன்று. இன்னும், நரம் பிணைப் பின்னிச் செய்யப்பட்ட இந்தயாக்கைக்கு, அவ்வகையே குச்சியும் கோலும் இணைத்து நாரால் பின்னப்பட்ட பறவைக் கூடு உவமையாதல் அன்றி, ஒன்றுனும் ஆக்கப்படாத முட்டை உவமையாகுமாறு இல்லை.

பரிமேலழகர் எடுத்துக் கூறிய மீண்டும் அதன்கண் புகுத லுடைமையை விலக்கவே 'தனித்து ஒழிய,' என்று சிதைவின் மையைக்குறிப்பிட்டார் ஆசிரியர் வள்ளுவர்.

**இறுதியில் :—**

பரிமேலழகரது இலக்கிய, இலக்கணப் பயிற்சியையும், எழுதுகின்ற உரைவளத்தையும், நடைவளத்தையும், பதசாரம் பாங்குறக் காணும் பண்பையும் கண்டு இறும்பூது எய்திற்று—எய்துகிறது இலக்கிய உலகம். ஆனல், பரிமேலழகர் சிற்சில விடங்களில், வள்ளுவரின் உள்ளத்தையே மறந்தவராய், தம் உள்ளச்சிந்தனையைக் கொட்டி யிருக்கின்றூர். மணக்குடவர் உரையைப் பல விடங்களில் மறுத்துத் தம்முரையை நிலை நாட்டி யிருக்கிறூர். ஆனல், பரிமேலழகர் உரை இந்த விதங் களில் இன்றைய இளைஞர் உலகத்தால் மதிப்பிழந்து வருகின் றது. தெய்வப்புலவன் திருவள்ளுவன் சொல் எல்லாருடைய உடம்பிலும் ஒரு தமிழ்வீறு கனலச்செய்து வருகிறது. தமி ழுணர்ச்சி தலைதூக்கி நிற்கின்ற நாளிலே—'அறிவினுளெல்லாம் தலையாய' வற்றிற்கே செவிசாய்க்கின்ற இந்நாளிலே—வேள்விப் பற்றோடும், இனப்பற்றோடும் சிற்சில இடங்களில் மிளிரும் பரிமேலழகர் உரையை அறிஞர் உலகமும் வெறுக்கத் தொடங்கி விட்டதில் வியப்பில்லை. திருக்குறளுக்கு வேண்டும் ஒரு புத் துரை,—பழமைக்குப் பழமை—புதுமைக்குப் புதுமையாக!

**வள்ளுவர் வாய்மொழி வாழ்க !!!**

---

சிவமுருகன் தமிழ்

# தமிழ் நெடுங்கணக்கு - பெயரும் எண்ணும்

[இராவ்சாகிப், சைவப்புலவர்
டாக்டர். தி. இரா. அண்ணுமலைப் பிள்ளை
L.C.P.S., L.M.S.S.A. Lond.]

(செந்தமிழ்ச்செல்வி—சிலம்பு உகு; பரல் கஉ; இளசஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

## விஞ்ஞானச் சான்றுகள்—யாழும் குழலும்

### பண்டைத் தமிழரும் இசைக்கலையும்

" குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்." —திருக்குறள்-மக்கட்பேறு. கூ

என்னும் தெய்வத் திருவாக்கைப் பன்முறை பணிந்துகூறி, யாழின் சிறப்பைப் பண்டைத்தமிழர் கண்ட முறையில் நோக்குவாம். ஆதிகாலத்தில், சிற்றோடை நீரோட்டங்களினின்றும், மரக்கிளைகள் ஒன்றோடொன்று உராய்தலினின்றும், சங்கு வண்டு, பறவை முதலியன ஒலித்தலினின்றும் மக்கள் கருத்தில் இசையைப்பற்றிய எண்ணம் தொடங்கியதென்று அறிவர் கூறுவர். இன்னிசைக் கருவிகளில், யாழ்தான் மிகத் தொன்மையானது, முதன்மையானது என்று சொல்வது உண்மைக்குப் பொருத்தமேயாகும்.

பண்டைத்தமிழ் நூல்களில், மிக மிகத் தொன்மையானது தொல்காப்பியம்; அது ஒரு சிறந்த கருவூலம்; இற்றைக்கு எண்ணுயிரம் ஆண்டுகளுக்கு முந்தியது என்று சிலர் கூறுவர். ஏறக்குறைய நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் ஆக்கப்பட்ட நூல் என்று பலர் கருதுகின்றனர். இந்நூல் எழுதப்பட்ட காலத்திற்கு முன்னரேயே பல்லாயிரம் ஆண்டுகளாக வழங்கி வந்த குறிப்புக்களெல்லாம் இந்நூலில் தொகுக்கப்பட்டுள்ளன. நம் முன்னோர் கணிதம், சோதிடம், சிற்பம், இலக்கணம், கூத்து, மருத்துவம், அரசியல், ஓவியம், கவித்துவம், யோகம், ஞானம் முதலிய பற்பல கலைகளிலும் சிறந்து விளங்கினர். இங்ஙனமே இசைக்கலையிலும் தலைசிறந்த தேர்ச்சி பெற்றிருந்தனர் என்று எளிதில் அறியும்படியான பல குறிப்புக்கள் தொல்காப்பியத்திற் காணப்படுகின்றன. இற்றைக்கு ஆறுயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட, சிந்துவெளி வட்டாரம்—(The Indus valley) மொகஞ்சதாரோ (இறந்தவர் மேடு) என்னும்

ஊரில், தோண்டியெடுக்கப்பட்ட பொருள்களிலும், இசைக் கலையைப் பற்றிய குறிப்புக்கள் காணக்கிடக்கின்றன என்றும் கூறப்படுகின்றது. பண்டைக்காலங்களில் பல்கலை நூல்கள் அனைத்தும் செய்யுள் நடையிலேயே எழுதப்பட்டுள்ளன; உரை நடையில் எழுதிய நூல்கள் காண்பதரிது. தொல்காப்பியத் திலும் செய்யுள்இயல்தான் மற்றைய இயல்களைவிட சாலப் பெரிது என்பது வெளிப்படை. இது நிற்க,

## இசைக் கலையும் அன்பின் பெருக்கும்

இல்லறத்திலும், துறவறத்திலும், இன்பம் நுகரும்பொழு தெல்லாம், மக்களது உள்ளம் அன்பால் நிறைகின்றது. 'அன் பின் வழியது உயிர்நிலை' யல்லவா! அன்பு நிரம்பியபொழுது பாடுவதும் ஆடுவதும் மக்களது இயல்புதானே. தமது உள்ளம் உயர உயர, எல்லாம்வல்ல இறைவனைப் போற்றுதற்குத் தக்க கருவியாய் அமைந்த இசையும் ஓங்கி வளர்கின்றது; மனமும் தூய்மை யடைகின்றது; மக்களும் உன்னத நிலையை அடைகின் றார்கள். இதனாலன்றோ, மேனாட்டுப்புலவர் அரசு, ஃசேக்ஸ் பியர் (Shakespeare) என்பவர், 'இசையிற் பற்றில்லாத ஒருவன் கொலைக்காரனுக்கு ஒப்பாவான்,' என்று கூறினர். யாதாமொரு மக்கட்டொகுதி (Nation) உயர்ந்த பண்பாடுடையவர்க ளென்று அளவிடுவதற்கு அவர்களது இசைக்கலையின் முதிர்ச் சியே உரைகல்லாகும். இந்தக் கட்டளைக்கல்லைக்கொண்டு நோக்கும்பொழுதுதான், பண்டைத் தமிழர் இசைக்கலையில் சிறப்புற்றிருந்த நிலை நன்கு விளங்கும். அகத்தியம், பெரு நாரை, பெருங்குருகு, பேரிசை, சிற்றிசை, இசைமரபு, இசை நுணுக்கம் என்னும் பல நூல்கள் தமிழில் இருந்தனவென்று அறிகிறோம். சிலப்பதிகாரம், பரிபாடல், கலித்தொகை, பத்துப் பாட்டு முதலிய சங்கநூல்களில் இசையைப்பற்றிய குறிப்புக் கள் நிரம்பியுள்ளன. அவை முழுவதையும் எடுத்துரைக்க இவண் இடந்தராது. ஆயினும் ஒரு சிலவற்றை இங்கு ஆராய் வோம்.

### தமிழ் இசையின் சிறப்பு

தமிழ் நெடுங்கணக்கானது (The Tamil Alphabet) ஓசையையே மூலமாகக் கொண்டது. ஓசைகளுக்குத்தான் பின்னர்க் குறியீடுகள் (எழுத்துக்கள்) அமைத்தனர். எழுத்துக் கள் தோன்றுவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, தமிழ்மொழி பேச்சுவழக்கிலிருந்து வந்ததென்று ஆராய்ச்சி யாளர் கூறுகின்றனர். அக்காலத்திலிருந்தே நம் முன்னோர் தத்தம் கருத்துக்களை இசையில் அமைத்துப்பாடி, தம்மாணுக்கர்

களுக்குக் கற்பிப்பது மரபு. அங்ஙனம், மனப்பாடமாகச் செய்யுள்களைச் சொல்லிவைக்கும் பொழுதுதான், எதுகை, மோனை முதலிய யாப்பின் உறுப்புக்கள் மிகப் பயன்பட்டன. தமிழ்மொழி, இசைக்கென்றே யமைந்த தனிமொழியாகும். இயல், இசை, நாடகம் என்னும் மூன்று பிரிவில், இசையே சிறந்ததாகும். தமிழ்இசைக்கும், அம்பலவாணன் திருக்கூத்துக்கும், நெருங்கிய தொடர்பு உண்டென்று கூறுவது மிகையாகாது. தமிழ் இலக்கணக்குறிப்புக்களை உற்றுநோக்குவார்க்கு, தமிழ்மொழி, இசையையே அடிப்படையாகக்கொண்டு திகழ்கின்றதென்பது எளிதிற்புலனாகும். பாவின் உறுப்புக்களாகிய எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை ஒவ்வொன்றின் அளவுந் தொகையும் நுட்பமாய் உறுதிப்படுத்தப்பட்டுள்ளன. இரண்டொரு சான்றுகள் இங்கு எடுத்துரைப்பாம். பன்னிரு இராசிகளிலும், ஏழு இசையும் (சுரங்கள்) இடம் மாறிமாறிவருவதனால், செம்பாலை, வட்டப்பாலை, ஆயப்பாலை, சதுரப்பாலை முதலிய பாலைகளினின்றே ஆதி இசைகள் எழுந்தனவென்று நம் முன்னோர் கருதினார்கள். இத்தகைய ஆதி இசைகள் பதினோராயிரத்து தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்று (11991) என்று கணித்தனர். இது பின்வரும் சூத்திரத்தினின்று விளங்குகின்றது. "உயிருயிர் மெய்யென வுரைத்தவைம் பாலினு, முடறமி ழியலிசை யேழுடன்படுத்து, மூவேழ் பெய்தங்........தொண்டு மீண்ட பன்னீராயிரங், கொண்டனர் இயற்றல் கொளைவல்லோர் கடனே—(12000 Minus தொண்டு (ஒன்பது) = 11991 - சிலப்பதிகாரம் - உரைவிளக்கம்) பாவின் சிறந்த உறுப்புக்களில், இன்னொன்று "தொடை" என்ப. இதன் தொகையைக் குறிக்கவந்த தொல்காப்பிய ஆசிரியர், "ஐயீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு, தொண்டு தலையிட்ட பத்துக்குறை எழுநூற், றொன்பஃ தென்ப உணர்ந்தி சினோரே." என்னும் சூத்திரப்படி, தொடையின் தொகை 13708 என்று வரையறுத்திருப்பதை வலியுறுத்தினர். "பதின்மூவாயிரத் தெழுநூற்றெட்டென மொழியப்பட்டன தொடை தெரி வகையே" என்பதும் அதுவேயாகும். இங்ஙனமே நம் முன்னோர், பாவின் உறுப்புக்களை யெல்லாம் அறுதியிட்டுக் கூறினராயின், பண்டைத்தமிழர் இசைக்கலையின் உச்சநிலையை இதினின்றே ஊகித்துக் கொள்ளலாம். இத்துடன் அவர்களது கணிதத் திறமையும் தெளிகின்றது. இத்தகைய நுணுக்கங்களை உள்ளடக்கிய தமிழ் இசையின் தனிச்சிறப்பை, மற்றைய நாட்டினர் அறியாவிடினும், தமிழர்களாவது அறிந்து உய்வார்களாக. இன்னும், இவ் இசைகளெல்லாம், ஆதித் தமிழ் நூல்களிற் சொல்லப்பட்ட 7, 12, 24, 48, 96 சுருதிகளினின்றே வகுக்கப்

பட்டுள்ளன வென்றும், "செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை இவைகளே, தற்காலத்தில் தீரசங்கராபரணம், கரகரப்பிரியை, அநுமத்தோடி, கல்யாணி, மேசகல்யாணி, அரிகாம்போதி, சுத்தத்தோடி என்னும் புதுப்பெயர்கள் கொண்டழைக்கப்படுகின்றன," வென்றும் கருணாமிர்தசாகரம் கூறுகின்றது.

தமிழும் ஏழிசையும்

இங்கு, எடுத்துக்கூறும் இசைக்குறிப்புக்களில், மிகச்சிறந்த தொன்று உண்டு. அஃதென்னையெனின்? தமிழில், இசை தோன்றிய காலத்தினின்றே, தற்காலத்தில் ச, ரி, க, ம, ப, த, நி என்று கூறப்படும் ஏழு சுரங்களும், குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்று முறையே அழைக்கப்பட்டு வந்தன.

"ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ வெனும்
இவ்வேழு எழுத்தும் ஏழிசைக் குரிய."

என்பது திவாகரம்.

ஆகவே, தமிழ் நெடுங்கணக்கு—உயிரெழுத்துக்கள் பன்னிரண்டில் நெட்டெழுத்துக்கள் ஏழுமே, ஏழு இசைகளையும் குறித்துவந்தது என்பது திண்ணம். இவ் ஏழு நெட்டுயிர்களையும் கருவியாகக்கொண்டு, நம் முன்னோர் கடந்த பதினாயிரம் ஆண்டுகளுக்குமுன், இசைபாடிவந்தனர் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. இசைகளைத் தற்காலத்தில் இராகங்கள் என்று அழைக்கின்றோம். இவைகளை, பண்டைத்தமிழர், 'பண்' என்றும், 'திறம்' என்றும் இருவகையாய்ப் பிரித்து வழங்கினர். குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்னும் ஐந்திணைகளைக் கொண்டு, பண்களை இயற்கையையொட்டி வகுத்தனர். மேற்கூறிய ஏழு நெட்டுயிர் எழுத்துக்களுக்குமே, ச, ரி, க, ம, ப, த, நி என்னும் குறியீடுகளை, தற்சமயம் ஏழு சுரங்களாக வழங்கி வருகிறோம் என்பது எளிதில் ஊகிக்கற்பாலது. ச, ரி, க, ம, ப, த, நி என்னும் ஏழு சுரங்களில், 'ம' மத்திமம் - ஏழு சுரங்களுக்கும் மத்தியிலுள்ளது, 'ப' பஞ்சமம்-ஐந்தாவது தானத்தில் உள்ளது என்று குறிப்பதை நோக்கும்பொழுது, இதற்கு மூலாதாரமான ஒரு கோவை இருந்திருக்க வேண்டுமென்பது புலனாகும். ஆகவே, ஆ=ச, ஈ=ரி, ஊ=க, ஏ=ம, ஐ=ப, ஓ=த, ஔ=நி என்பது வெளிப்படை. எங்ஙனம், 'ம' மத்தியிலுள்ளதையும், 'ப' ஐந்தாவது தானத்திலுள்ளதையுங் குறிக்கும் காரணம்பற்றி எழுந்ததோ, அம்மாதிரியே, இன்று வழக்கில்

இருக்கும் ச, ரி, க, ம, ப, த, நி என்னும் ஏழுசுரங்களும் அமைக்கப்பட்டுள்ளன என்பது முன்னர் விளக்கமாய் எடுத்துரைக்கப்படும்.

## ஏழிசையும் ஏழு கன்னிகைகளும்

ஆதிகாலத்தில், நம் முன்னோர் கொண்ட கடவுட்கொள்கை யாவும், நமது பண்டைய நூல்களில், ஒவ்வொரு பகுதியிலும் ஊடுருவிச் செல்கின்றன. அவை, நமது சமய நூல்களில் நன்கு ஒளிர்கின்றன. எல்லாம் வல்ல முழுமுதற் கடவுள் ஒருவனே யுளன் என்றும், அம்முதல்வன், இப்பேரண்டத்திலுள்ள உயிர்கள் உய்யும்பொருட்டுத் தனது அருளை வழங்குகின்றானென்றும், இதன்பொருட்டே தனது தன்மையிற் சிறிதும் திரியாமல், பல தொழில்கள் புரிகின்றனனென்றும், எங்கும் நிறைந்த அவ் ஒருவன் இத்தகைய தொழில்களைத் தன்னினின்று வெளிப்படும் பல சத்திகளைக்கொண்டு இயக்குகின்றானென்றும், இதனானே அண்டமெங்கும், (இறைவனும் சத்தியும் ஒன்றாய் நிற்பது போல), உயிர் வடிவங்கள் அனைத்தும் ஆணும் பெண்ணுமாய் வாழ்கின்றனவென்றும் நமது முன்னோர் கருதிவந்தனர். ஆண்டவனது சத்தியை அருட்சத்தியென்று கூறுவர். இச்சத்தி ஒன்றேயாம்; ஆனால் இறைவன் நடாத்தும் பல்வகைத் தொழிலுக்குத் தகுந்தாற்போலச் சத்தியும் மாறுபடுவதாக நமக்குத் தோன்றுகிறது. இதைச் சமய ஆசிரியர்கள் "சத்திபேதம்" என்று அழைப்பர். இதே கருத்தைத்தான் "சத்திதான் பலவோ வென்னில் தான் ஒன்றே அநேகமாக" என்று சிவஞான சித்தியார் கூறுகின்றது. சிறப்புத்தொழில் பற்றி, அச்சத்தி பல்வேறு காரிய வேறுபாட்டால், பலவாகக்கொண்டு வெவ்வேறு பெயர்களும் இட்டு அழைக்கப்பட்டு வருகின்றன. பன்னிரண்டு இராசிகளிலும் ஏழு கோள்களும் (Sun and its planets) இடம் மாறி மாறி வருவதாகக் கொண்டனர். இதுபோன்று ஏழு சத்திகளும், பேரண்டம் எங்கும் இயங்குகின்றனவென்று தெளிந்தனர். ஒவ்வொரு சத்திக்கும் பெயரும் எழுத்தும் அமைத்தனர். இச்சத்திகள் இசைபாடுவதாயும், இவ் இசையினின்றே உலகம் படைக்கப்படுகிறதென்றும் கண்டனர். இங்ஙனமாக, இறைவனோடு ஒன்றியே நிற்கும் சத்தியை ஏழு விதமாகப் பகுத்தனர். ஏழுக்கும் ஏழு நெட்டுயிர் எழுத்துக்களைக் (ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ) குறியீடாக அமைத்து, இவை ஏழிசையையுங் குறிப்பதாகக் கருதினதுமன்றி, ஏழு சத்திகளையும் ஏழு கன்னிகைகளாகவும் (சத்தமாதர்) திருக்கோயில்களில் சிலை அமைத்து வணங்கிவந்தனர். இம்மரபினின்றே வானத்திற்றோன்றும் விண்மீன் தொகுதி ஒன்றுக்கு

ஏழு முனிவர் (சப்தரிஷி) மண்டலம் என்று அமைத்தனரோ என்று எண்ணுவதற்கு இடமுண்டு.

தமிழ்நூல்களில், சத்தமாதர் துதி பரக்கக் காணலாம். குமரகுருபர அடிகள் ஈந்தருளிய மீனாட்சியம்மைபிள்ளைத் தமிழ், முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் முதலிய திருப்பாடல்களில், சத்தமாதர், முப்பத்து மூவர் வணக்கங்களைக் காண்கிறோம். கலிங்கத்துப் பரணி என்னும் உயரிய நூலில் கடவுள் வாழ்த்தில் ஏழுகன்னிகைகளுக்கு வணக்கம் தனியே அமைக்கப்பட்டதுடன் அவர்களுக்குரிய கொடியும் சுட்டப்பட்டிருப்பதை நாம் படிக்கிறோமல்லவா ?

'மேதி புள்ளலகை தோகையேறு உவணம்
வேழ மென்றகொடி யேழுடைச்
சோதிமென் கொடிக ளேழி னேழிரு
துணைப்ப தந்தொழ நினைந்துமே
கேழன் மேழிகலை யாளிவீணை சிலை
கெண்டை யென்றினைய பல்கொடி
தாழ மேருவி லுயர்த்த செம்பியர்
தனிப்பு லிக்கொடி தழைக்கவே.'

சங்க நூல்களில் முப்பத்து மூவரைப்பற்றிய குறிப்புக்கள் பல்இடங்களிற் காணப்படுகின்றன. ஏழு கன்னிகைகள் (சத்த மாதர்கள்) முப்பத்துமூன்று தேவர்களில் ஒரு பகுதியார் என்று எண்ணுவதற்குத் தக்க சான்றுகள் காணப்படுகின்றன. ஒரு வாரத்துக்கு ஏழு கிழமைகள் (ஞாயிறு, திங்கள்..........) என்றமைந்திருப்பது உலகெங்கும் ஒன்றுபோல காணப்படுவது ஒரு பெருவியப்பல்லவா? அதைவிட ஏழு கிழமைகளும் ஞாயிறு, திங்கள் என்னும் அதே வரிசையில், உலகமெங்கும் காணப்படுவதும் பேரதிசயந்தானே ! இம்மாதிரியே ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ (ச, ரி, க, ம, ப, த, நி) என்னும் ஏழு சுரங்களும் உலகமெங்கும் ஏழாயிருப்பது தனி அற்புதமல்லவா ? இத்தகைய ஏதுக்களெல்லாம் இவ்வுலகிலுள்ள மக்கள் அனைவரும் ஓரிடத்தில் தோன்றி பல பாகங்களுக்கும் சென்றிருத்தல் வேண்டும் என்று துணிதற்கு இடந்தருகின்றன என்பதும் பொய்யாமோ !

(தொடரும்)

# செய்திகளும் குறிப்புகளும்

## மறைமலையடிகள் முதலாண்டு நினைவு

செந்தமிழ்த் தெய்வ உருவினராய்த் திகழ்ந்து, மும்மொழிக்கண்(தமிழ் வடமொழி, ஆங்கிலம்) ணும் ஈடும் எடுப்புமில் பீடுடைப் பெரும்புலவராய்ப் பாவலராய், நாவலராய், நூலுரை ஆசிரியராய், செந்நெறிக் குரவராய், 'கற்றோர் அறியா அறிவினராய்க், கற்றோர்க்குத் தாம் வரம்பாய தலைமையராய்'; நம் அருமைத் தமிழ்த்தாய் என்றுங்குன்றா இளமையும், கலப்பில் தூய்மை நலமும், நினைப்பார் நெஞ்சுக்கினிய சொல்லுவார் நாவுக்கினிய கேட்பார் செவிக்கினிய அமிழ்தினுமினிய விழுமிய மெல்லோசையும் அமைந்து விளங்கும் மாண்பும், தனித்தியங்கும் அளவிலாற்றலும், தமிழகத்துக்கேயன்றி உலகுக்கே எடுத்து விளக்கிய ஒண்மையராய், தமிழ் இளைஞர் உலகத்தைத் தட்டி எழுப்பிப் பண்டைத் தமிழ்ச்சான்றோர் சீரிய வாழ்வுடன் ஒட்டி நேரிய முறையில் நனிநாகரிகராய் வாழ நல்வழி காட்டிய நல்லாராய் ஓராண்டுக்கு முன்வரை நம்மிடை விளங்கினர் அடிகளார்.

நம் தவக்குறைவால் அடிகள் நம்மைப் பரிவுற விட்டுப் பொன்னம்பல வாணன் திருவடிக்கீழ் முடிவில் பேரின்பம் எய்தினர். அடிகள் பேராவியற்கை எய்திய பெருநாளையொட்டித் தமிழ்ப்பேரன்பர்கள் மாபெருங் கூட்டங் கூட்டி அடிகளின் நினைவுக்குறி எழுப்புவதுபற்றியும், அடிகளார் நன்னோக்கத்துடன் நடுநிலை பிறழாது நாளிலம் ஒப்ப அமைத்த இறுதி முறியின்படி, அடிகள் வாழ்நாளெல்லாம் கற்று அருங்குறிப்புப் பல அங்கையால் வரைந்து அழகுற அமைத்துள்ள ஆயிரக்கணக்கான நூல்களை அடிகள் திருப்பெயராலேயே ஓர் அரும்பெரும் நூல்நிலையம் அமைத்து அடிகளார் நேரில் செய்துள்ள அரும்புலமைத் தொண்டை அவர்கள் நூல் வாயிலாகத் தமிழுலகம் என்றென்றும் பெற்று இன்புற்று வாழ வழிசெய்ய வேண்டுமென்பது பற்றியும் வற்புறுத்துரைத்தனர். அவர்கள் ஆக்கியருளிய மணியனைய விலை வரம்பில்லா விழுத்தகு நூல்கள் பலவும் விரைவில் அச்சிட்டு வெளிப்படுத்துவதுமொன்று. இவை போன்ற பலவும் அடிகள் நம்மைப் பிரிந்து ஓராண்டாகியும் ஒரு சிறிதும் நிகழாமலிருப்பது பெரிதும் வருந்துவதற்குரியதெனப் பேசுவது பிழையாகா. இனியேனும் தமிழ் மக்கள் விழித்தெழுந்து வேண்டுவ விரைந்து புரிவார்களாக.

அடிகளார் பிரிவின் முதலாண்டு நினைவு விழாவை ஆங்காங்கே பலவூர்களிலும் பல இடங்களிலும் தனித்தும், சேர்ந்தும், பல கழகங்களின் சார்பாயும், அன்பர்கள் திரளாகக் குழுமிச் சீரும் சிறப்புமுறக் கொண்டாடினர் என அறிகின்றோம். பலவேறு தீர்மானங்களும் மேற்குறித்த செய்திகளை நிறைவேற்றுமாறு வற்புறுத்தி ஆக்கியுள்ளதாகவும் அறிகின்றோம். நாமும் நம்முடைய அகம் அமை ஆழ்ந்த பரிவினை அன்புடன் அறிவித்துகொள்கின்றோம்.

## வெளிநாட்டில் வீரத்தமிழர்க்கு வழங்கிய தனிப்பாராட்டு

வாசிங்டன், அக்டோபர் 8, யு. எஸ். பாதுகாப்புத் துறையினரால் இது வழங்கப்பெற்றது. இப்பெருவீரர் வேலூரைச் சார்ந்தவர். கர்னல் டாக்டர் அரங்கராஜ்; அகவைமுப்பத்தைந்து இரண்டாவது உலகப் போரில் பர்மாவிலும், காஷ்மீரிலும், கொரியாப் போரில் கொரியாவிலும் அஞ்சாமை அறிவூக்கத் தீரராய்ப்படைமறவர்கட்கு வியத்தகு திறலுடன் தொண்டியற்றினர். தளபதிகோவிந்தராஜனும் அப்பாராட்டுப் பெற்றனர்.

# மதிப்புரை

**இலக்கியப் பொழில்**

[ஆக்கியோர்: திருச்சிராப்பள்ளிச் செய்ண்ட் சோசப் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. எம். ரம்போலா மாஸ்கரேன்ஸ் எம். ஏ., அவர்கள். விலை: ரூபா 1-8-0. கிடைக்குமிடம்: ஒற்றுமை நிலையம், எண் 8, வியாசராவ் தெரு, தியாகராயநகர், சென்னை 17.]

இதன்கண் இளங்கோவடிகள் முதலாக மாதவையா ஈருகவுள்ள எண்மர் வரலாறுகள், மலை, நாடு, யாறு, நூல் முதலிய பொருள்கள் இவைகளைப் பற்றிச் செவ்விய முறையில் உண்மைக்கு மாறின்றித் தக்க பெருஞ் சான்றுகளுடன் எழுதப்பட்டுள்ளன. நடை ஆற்றொழுக்கமைந்தது. இனிமையும் எளிமையும் பொதுளியது. உயர்நிலைப்பள்ளி மாணவர் உள்ளக்கிளர்ச்சியராய்க் கற்று மொழியும் நடையும் வளம்பெற்று, அழிவில் ஒழுக்கமுடையராய்த் திகழப் பெருந்துணை புரிவது.

அரசியலாரும், ஆசிரியரும், மாணுக்கரும், பெருமக்களும் இந் நூலைப் போற்றிப் பயனெய்துவதுடன் மேலும் இவ்வாசிரியர்வழிப் பன்னூல் வெளிவந்து தமிழ்த் தாய்க்கு அணிசெய்ய வழிசெய்வார்களாக.

**இல்லற வொழுக்கம்**

[ஆக்கியோர்: யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள். விலை: அணு நான்கு. கிடைக்குமிடம்: சுத்தானந்த நிலையம், புதுக்கோட்டை.]

இது முந்நூற்றறுபத்தைந்தடிகள் கொண்ட அகவற்பாவால் யாக்கப் பெற்றது. குடும்ப வாழ்வுக்கும், நாட்டு நலனுக்கும், நல்லுயிர் வீட்டுக்கும் வழிகாட்டியாக அமைந்துள்ளது. அழகிய பதிப்பு. அனைவர்க்கும் இன்றியமையாததொன்று.

**வாழ்க்கையோ கவலையோ**

[ஆக்கியோர்: கோவை கிழார் இராவ்சாகெப் திரு. இராமச்சந்திரன் செட்டியாரவர்கள். கிடைக்குமிடம்: கோவை நிலையப் பதிப்பக லிமிடெட், 4/89 திருச்சிப் பாதை, கோயமுத்தூர். விலை: 1-12-0.]

இந்நூல் அகவல் யாப்பால் யாக்கப்பெற்ற புனைவு. அகவல் யாப்பால் அமைந்திருப்பினும் எளிய இனிய உரை நடைபோன்றே இலங்குகிறது. இது முப்பத்திரண்டு அருந் தலைப்புக்கள் கொண்டு விளங்குகின்றது. ஆசிரியர் உலகியல் உண்மையை மிகத்திறம்பட விளக்குகின்றார்கள். குறிப்பாக வறுமை செல்வமென மக்களிடங் காணப்படும் கொடுமை விலங்கின்கண் காணப்படவில்லையென்பதை எடுத்துக் காட்டி வலியார் மெலியாரை நலிவு செய்து வாழும் வன்கண்மையைப் புலப்படுத்துகின்றார்கள்!

வறுமையுறின் மானமுள்ளார் தாம்பெற்ற மக்களையும் கொன்று தற்கொலையும் புரியத் தயங்கார் என்பது காட்டப்படுகின்றது. தாழ்ந்த மக்களுக்கு நற்சார்பு வாய்க்கின் அவர்கள் கல்வி, யொழுக்கம், வேளாண்மை முதலியவற்றால் சிறந்து மேனிலை எய்துவர் என்பதும் காட்டப்பட்டுள்ளது. இந்நூல் வாழ்க்கை இன்னல்களை அகற்றவும், இன்புற்று வாழவும் வழி செய்கின்றது. தமிழுலகம் இதனைப்பேணி நன்மை கடைப்பிடிக்குமாக.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.